*ஜயஜய ரகுவீர ஸமர்த்த*
*ராமக்ருஷ்ண ஹரி*

# த்ரிவேணி

மராட்டி அபங்கங்கள்
(தமிழ் மொழிபெயர்ப்புடன்)

*ஆசிரியர்*

**வெ. நாராயண பந்த்**
நங்கநல்லூர்,
சென்னை—600 061.

*"ஸர்வ காளி ப்ரீதி ஸந்தாசீயா ஸங்கே*
*காவே அனுராகே ஹரிநாம"*

— பக்தநாமதேவர்

பதிப்பு வருடம் ஜூலை 2005

விலை: ரூ. 40/-

அச்சிட்டோர் :

சுதா ஆர்ட் பிரிண்டர்ஸ்

நெ. 1, 7–வது தெரு,

2–வது மெயின் ரோடு,

நங்கநல்லூர், சென்னை–600 061.

ஃபோன் : 2234 2107 / 2231 3152

கிடைக்குமிடம் :

வெ. நாராயண பந்த்

3/2, குருப்ரஸாத்,

42–ம் தெரு,

நங்கநல்லூர், சென்னை–600 061.

ஃபோன் : 22329381

மதுரை சேதுராம் பஜன் மண்டலி

12, தானப்ப முதலி தெரு,

மதுரை–625 001

# வாழ்த்துரை

## ஆஜீ ஸோனியாஞ்சா தின்

'எத்தனைதான் தோஷங்கள் உடையதாக இருந்தாலும் இந்தக் கலியில் ஒரு மகத்தான குணம் உள்ளது. அடியார்களுடன் கூடியிருந்து குளிர்ந்து பகவானின் திருநாமங்களைப் பாடிப் பரவுவதால் சுலபமாக இந்த சம்சார சாகரத்திலிருந்து கரையேறிவிடலாம்' என்று நமக்குச் சொல்லித் தருகின்றது ஸ்ரீமத் பாகவத புரா ணம்.

'பதினெட்டு புராணங்களின் சாரமும் திருநாமகீர்த்தனத்தின் பெருமையைத் தான் பேசுகின்றன' என்று ஜகத்குரு துகாராம் ஸ்வாமிகளும் சித்தாந்தம் செய் கின்றார்.

பாண்டுரங்க பக்தியைப் பிரகடனப்படுத்தும் 'வார்கரீ' ஸம்பிரதாயத்தின் ஸ்தா பகர் ஸ்ரீஞானேஸ்வரர். 'மஹாவிஷ்ணுசா அவதார ஸகா மஜா ஞானேஸ்வர' என்ற ஜனாபாயின் திருவாக்குப்படி இவர் திருமாலின் அம்சமே ஆவார்.

இந்தக் கலியுகத்தில் பல்வேறு துன்பங்களால் மூச்சுத் திணறி, விழி பிதுங்கி, காட்டுமிராண்டிகள் போல் அமைதியின்றி அலைய நேர்ந்துவிடுகிற ஜீவகோடிக ளுக்கு அபயம் கொடுப்பதற்கென்றே பாகவத தர்மத்தை ஏற்படுத்தினார் பக வான்.

அர்ச்சாவதார ஸேவை, திருநாம கீர்த்தனம் ஆகியவற்றை முக்கிய அங்கங்க ளாக உடைய பாகவத தர்மத்தின் ஸ்தாபகர் ஸ்ரீவிட்டலனே ஆவார். அர்ச்சாவ தாரமாக பண்டரிபுரத்தில் கோயில் கொண்டு இந்தத் தருமத்தைப் பரப்பும் அந் தக் கருணைக் காளமேகம், 'ஞானேஸ்வரர்' என்ற திருநாமத்தோடு 'விபவ' அவ தாரமும் எடுத்தார்; பக்தி மார்க்கத்தைப் பரப்பினார். இதனால் கலி நசிந்தது.

மராட்டிய பூமிதான் பக்தியின் தாயகமாக விளங்குகிறது. அங்கு அவதரித்த பக்தர்கள் செய்த நாம பிரசாரத்தால் அகில பாரதமும் பாவனமாகியது.

மராட்டிய பக்தர்களின் அருளிச் செயல்களுக்கு 'அபங்கங்கள்' என்று பெயர். "ஸமஸ்கிருதத்தில், 'புஜங்கம்' என்றழைக்கப்படும் கவிதைப் பாணியே அபங்கங் கள் என்றானது. அவ்வகையில், 'மஹாயோக பீடே' எனத் தொடங்கும் முதல் அபங்கத்தைப் பாடியவர் ஸ்ரீ ஆதிசங்கரர். அதே நடையைப் பின்பற்றி மராட் டிய பக்தர்கள் அனைவரும் அபங்கங்களாகப் பாடிக் குவித்து, உலகுக்கு நல்வழி காட்டினர்" என்று அழகாக விளக்கியுள்ளார் பரனூர் மஹாத்மா ஸ்ரீஸ்ரீகிருஷ்ண ப்ரேமி ஸ்வாமிகள். 'அபங்கத்துக்கு சமமான சாஸ்திரம் இல்லை' என்பதும் ஸ்வா மிகளின் திருவாக்கு.

வாக்கில் அபங்கத்தையும், கண்களில் பண்டரி தரிசனத்தையும், மனதில் ஸம சரண தியானத்தையும், நற்றுணைக்கு பாகவதர்களின் சங்கத்தையும் ஒரு ஜீவன்

பெற்றுவிட்டால், அதன் பின்னர், 'ஆஜி ஸோனியாஞ்சா தின்' என்று அன்றாடம் சொல்லிக் களிக்கலாம்! ஒவ்வொரு கணமும் பிரேமையில் திளைக்கலாம்!

தமிழகத்தில் காலம் காலமாக பாண்டுரங்க பக்தி இருந்து வருவது இந்த மண் செய்த பாக்கியம். நம்மால் அறியப்பட்டதும், அறியப்படாததுமாய் எத்தனையோ விட்டல ஆலயங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. பல கிராமங்களில் பஜனை மடங்கள் ஒரு காலத்தில் கம்பீரமாக விளங்கியிருக்கின்றன. அங்கெல்லாம் விட்டல மஹிமையே பிரதானமாக முழங்கப்பட்டிருக்கும் என்பதில் ஐயம் இல்லை. ஏனெனில் விட்டலன், நாமத்துக்கென்றே அவதரித்த வள்ளல்.

இந்நிலையில், மராட்டிய மொழி தெரியாத திராவிட தேச பக்தர்களுக்கு அபங்கங்களை அர்த்தத்துடன் அறிமுகப்படுத்துவது ஒரு மாபெரும் திருப்பணியாகிறது. அந்தப் பணியை அயராது ஆற்றி வருகின்றார் ஸ்ரீநாராயண பந்த் மஹராஜ். அவரது புலமை, பிரமிக்க வைக்கும் தன்மை உடையது! பக்தியினால் சுயமாக் ஏற்பட்டது! அதனால் ஆரவாரம் அற்றது! அபங்கங்களின் மையக் கருத்துக்கு ஏற்ப திராவிட வேதங்களிலிருந்து அவர் மேற்கோள்கள் காட்டியுள்ள விதம் போற்றுதலுக்குரியது.

துரதிருஷ்ட வசமாக தமிழகத்தில் சைவ - வைஷ்ணவ சண்டை ஆதி நாளிலிருந்தே அதிகமாய் உள்ளது. சிவன் மீதுள்ள பற்றினால் விஷ்ணுவை தூஷிப்பதும், விஷ்ணு பக்தியினால் சிவ நிந்தை செய்வதும் மாபெரும் அநியாயம்! தெய்வத் துரோகம்! இப்படிச் செய்வதால் ஸநாதனமான நமது மதத்திற்குத்தான் கேவலமும், பாதிப்பும் உண்டாகிறதென சம்பந்தப்பட்டவர்கள் உணர்வதில்லை. கள் வெறி வேண்டுமானால் கண்ணை மறைக்கலாம். பக்தி வெறியுமா அப்படிச் செய்யும்?

சைவ - வைஷ்ணவ பேதத்தால் நலிவுற்றிருக்கும் திராவிட தேசத்து ஆன்மீகத்தைச் சீர்திருத்த அபங்கங்களைத் தவிர வேறு கதியில்லை. மற்ற ஸம்பிரதாயங்களைவிட 'வார்கரீ' மட்டுமே சிவ – விஷ்ணு பேதத்தை அதிகமாகக் கண்டிக்கிறது. அந்த நன்னெறிகள் தமிழகத்தில் ஊன்றப்படவும், பாகவத தர்மம் செழிக்கவும் அபங்கங்களும், அவற்றின் நாயகனான ஸ்ரீவிட்டலனுமே வழி காட்ட வேண்டும்.

அந்தத் தெய்வ காரியத்துக்கு உறுதுணையாக நிற்கும் திரு. நாராயண பந்த் போன்ற மஹனீயர்கள் தமிழ்நாட்டில் தோன்றியிருப்பது, விட்டல பக்தர்கள் செய்த பாக்கியம். அவருடைய படைப்புகளில் ஒன்றான 'த்ரிவேணி' என்ற தொகுப்பு, பாண்டுரங்கனின் சிரசிலிருந்து பெருகும் புண்ணிய தீர்த்தமாகவே விளங்குகிறது. இப்புனித நீர், நாடெங்கும் பக்திப் பயிர் செழிக்க உதவும். அதற்கு எல்லாம் வல்ல ஸத்குருநாதனின் சங்கல்பம் துணை நிற்கட்டும். நம: சிவாய! ஜெய் ஜெய் ராம்கிருஷ்ண ஹரி!

ஆர். சிவகுமார்
ஆசிரியர்—சினிமா எக்ஸ்பிரஸ்,
தமிழன் எக்ஸ்பிரஸ்

## கணாதிபதயே நம :

# முன்னுரை

பாண்டுரங்கனின் அருள் பெற்ற அடியார்கள், அவர் மீது ஆயிரக்கணக் கான பாடல்களை (அபங்கங்கள்) மராட்டிய மொழியில் அருளியுள்ளனர். இந்த அபங்கங்கள் தற்போது தமிழ்நாட்டில் பரவலாக பஜனை ஸம்மேள னங்களிலும், ஸங்கீதக் கச்சேரிகளிலும் பாடப்பெற்று வருகின்றன.

ஸ்ரீநாமதேவர் ஸ்ரீஏகநாதர், ஸ்ரீதுகாராம் ஸ்வாமிகள் அருளிச் செய்த் நூற்று ஐம்பது அபங்கங்கள், தெளிவுரையுடன் இச்சிறு புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன. மராட்டிய மொழியில் (தேவநாகரீ லிபி) உள்ள இந்த அபங் கங்கள் தமிழ் எழுத்துக்களில் அப்படியே எழுதப்பட்டுள்ளன. சரியான உச்ச ரிப்பு அவ்வப்போது பிசகினாலும் சற்றுப் பழக்கப்படுத்திக் கொண்டால் அத் னைத் திருத்திக் கொள்ள முடியும். சரியான உச்சரிப்பில்தான் அபங்கங்களில் பொதிந்திருக்கும் பாவ உணர்வு வெளிப்படும்.

இறைவன் ஏழிசையாய், இசைப் பயனாய், இன்னமுதாய் இருப்பதினால் அவனை இசை மூலமாகவே அடியார்கள் வழிபடுகின்றனர். "கண்ணுதற் பெருமான் கருணைக்கு நம்மை ஆளாக்கும் பான்மையில்" இந்த அபங்கங்கள் அமைந்துள்ளன.

பக்தி நெறியில் தீவிரமாக நின்றவர்கள் இந்த மஹாராஷ்டிர ஸாதுக்கள். நாமதேவர் விட்டலன் சொல்லியபடி 'விஸோபா கேசர்' என்பவரை குரு வாக ஏற்றார். துகாராம் ஸ்வாமிகளுக்கு விட்டலனே பாபாஜி என்ற உருவில் கனவில் வந்து தீக்ஷை அளித்தார். ஏகநாத ஸ்வாமிகளுக்கு ஜனார்தன் ஸ்வாமி குருவாயிருந்து தத்தாத்ரேயரின் தரிசனத்தையும் அவர் அருளையும் பெறவைத்தார்.

இறைவனின் அருளைப் பெற்ற இம்மூவரின் அபங்கங்கள் இப்புத்தகத்தில் இடம்பெற்றுள்ளன. நாமதேவரும், ஏகநாதரும் முக்கியமாக விட்டலனையே பாடிக் கொண்டிருக்க துகாராம் சமூகத்தில் நிலவிய குறைகளைத் தைரியமா கச் சுட்டிக் காட்டுகிறார். துகாராம் தாம் சொல்வதை எளிய இனிய வார்த்தை களில், ஆனால் பொருள் பொதிந்த வார்த்தைகளில் சுருங்கச் சொல்லி விளக் குகிறார்.

அபங்கங்களை உணர்வோடும், இசையோடும் பாடும்போது பக்திப் பரவ சம் ஏற்படுவதைப் பலர் உணர்கின்றனர். "சந்தம் இசையோடும் வல்லார் புகழ் எய்துவர்" என்று சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் சொல்வது அபங்கங்கள் விஷயத்தில் சாலப் பொருந்தும்.

"பிறப்பிலி பேர் பிதற்றி நின்று இழக்கோ எம் பெருநலமே" என்று ஞான சம்பந்தப் பெருமான் பாடியதுபோல இறைவன் நாமத்தைப் போற்றித் துதி செய்தும் பெருமைக்குரிய எல்லா நலன்களையும் இழப்பது தருமமா என்று இறைவனிடம் கேட்பதை பல அபங்கங்களில் ஆங்காங்கே காணலாம். இறை நாமங்களைப் பாடுபவர்க்கு எல்லா நலன்களையும் இறைவனே அருள்வான் என்பது இதன் உட்கருத்து.

'அருள் நிலையிலிருந்து பாடுகிறவர்களுடைய பாடல்களில் அருட்சக்தி உண்டு -மற்றவர்கள் உள்ளத்திலும் பேருணர்வை அப்பாடல்கள் கிளப்புகின் றன' என்றும், 'இறைவனுடைய திருநாமத்தை ஓதச் செய்து ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் இழிகுலத்தவர்களையும் மேன்மக்களாக்கிவிட்டார்' என்றும் கூறி யுள்ளார் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர். மஹாராஷ்டிரத்தில் அவதரித்த ஞானேஸ்வரர், நாமதேவர், துகாராம் போன்றோர் இத்திருப்பணியைத்தான் செய்துள்ளனர்.

துகாராம் ஸ்வாமிகள் தன்னுடைய அபங்கங்களில் கூறுவதையும் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் கூறுவதையும் ஒப்பிட இந்த இருவரது கருத்தும் ஒன் றாகவே உள்ளதைக் காணலாம். உதாரணத்திற்கு:

துகாராம்: வயிற்றை எப்படி நிரப்புவது என்ற கவலையிலேயே ஆசார அனுஷ்டானங்கள் குறைகின்றன. அந்தக் கவலையிலேயே மனித தேகம் அழி கின்றது.

ராமகிருஷ்ணர்: ஸத்கருமங்களை நிஷ்காம்யமாகச் செய்வது இந்தக் கலியுகத் தில் மிகக் கடினம். இக்காலத்தில் மனிதனுடைய உயிர் அன்னத்தைச் சார்ந்தி ருக்கிறது.

துகாராம்: ஹரி பக்தியில்லாதவன் கையில் காவி உடையைத் தொட வேண் டாமே.

ராமகிருஷ்ணர்: வெளி வேஷத்திற்குக் காவியுடையணிவதைவிட நேராக வெள்ளை வேஷ்டி அணிவது மேலானது.

துகாராம்: மனிதனுடைய மூல ஸ்வபாவம், முற்பிறவி வாஸனை ஒழியாது.

ராமகிருஷ்ணர்: சுரக்குடுக்கையில் செய்யப்பட்ட கமண்டலம் தீர்த்த யாத் திரை போகிறது. ஆயினும் அதன் கசப்பு அதைவிட்டு அகலுவதில்லை.

இவ்வாறு பல உதாரணங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். பக்தி யின் உச்ச நிலையில் இருந்து கொண்டு இறைநிலையில் திடமாக நின்ற பெரியார்களின் வாக்குகள் வேறுபடுவதில்லை. ஏனென்றால் அவையெல் லாம் தானாகவே வெளிவந்த அருள் வாக்குகள்! இறைவனிடமிருந்தே அவை வெளிப்படுகின்றன.

'வேங்கடாத்வரி கவி' (காலம் 1590-1660) எனும் மஹாகவி, ஸ்ரீதேசிகனுடைய தாய்மாமனும் ஆசார்யருமான அப்புள்ளார் வம்சத்தில் பிறந்தவர். இவர், ஸ்ரீஅப்பைய தீக்ஷிதரின் மகனான ரகுநாத தீக்ஷித கவியின் மகனாவார். சிறந்த ஒரு வம்சத்தில் தோன்றிய இந்த மகாகவி இயற்றிய நூல்கள் 108 என்று சொல்லப்பட்டுள்ளது. வேத சாஸ்திரங்களில் கரை கண்டவர். இவர் விச்வ குணாதர்ச சம்பு எனும் காவியத்தை (கத்ய-பத்ய நடையில்) இயற்றியுள்ளார். இந்தக் காவியம் நம்நாட்டின் பல பிரதேசங்களில் உள்ள விசேஷங்களையும் பல்வேறு பட்ட ஜனங்களின் பழக்க வழக்கங்களையும் பற்றியதாகும். இவர் மஹாராஷ்டிர தேச வர்ணனை செய்யுமிடத்து அங்குள்ள ஜனங்களின் நிறைகுறைகளைக் கூறுகின்றார். அப்போது, "சிறந்த ஹரி பக்தி துக்கத்தையும், பிறவித் துன்பத்தையும், அக்ஞானத்தையும் அழித்துவிடும். தீர்த்த யாத்திரைகள் மேற்கொண்டு தேகத்தைப் புனிதப்படுத்திக் கொண்டவர்களும் மனைவி, மக்கள் வீடு இவைகளில் பற்றில்லாதவர்களுமான இவர்களிடம் சாரமறிந்தவர்கள் ஆதரவு காண்பிக்க வேண்டியது அவசியம். மஹாராஷ்டிர மலைப்பிரதேசத்து வீரர்கள் கடுமையானவர்களாகத் தோன்றினும், அவர்கள் நாட்டைச் சுற்றி பலமுறை வராவிட்டால் அப்போதிருந்த மிலேச்சக் கூட்டம் இந்த நாட்டில் தெய்வங்களேயில்லாமல் செய்திருக்கும். அவர்களை ஒழித்துக்கட்டிய இந்த மக்களின் குறைபாடுகள் முதலியவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்கிறார் மகாகவி. (இந்நூல் 1968ல் இந்திய அரசின் பொருளுதவியுடன் சென்னை ஹிந்து அலுவலகத்தில் அச்சிடப்பெற்றதாகும்)

மஹாராஷ்டிர மாநிலத்தில் தோன்றிய பலப்பல ஸாதுக்களின் பணியும், சத்ரபதி சிவாஜியின் அரசாட்சியும் நம் பாரத கலாசாரத்தை அழிவினின்று காப்பாற்றின என்பது மறக்க முடியாத சரித்திர உண்மையாகும்.

மராட்டி அபங்கங்களை மொழி பெயர்ப்பதில் பல சிக்கல்கள் உள்ளன. தற்போது வழக்கில் இல்லாத (புது அகராதிகளிலும் இல்லாத) பல சொற்கள் மஹாராஷ்டிர பக்தர்களால் கையாளப்பட்டுள்ளன. ஆகையால் பொருள் கூறுவதில் (அடியேனைப் போன்று எழுத்தாற்றலும் இல்லாத) குறைகள் காணப்பட்டால் அதனைப் பொருட்படுத்தாமல் அவற்றை அந்த விட்டலனின் காலடிகளில் போட்டுவிட்டு, அபங்கங்களின் உட்கருத்தை மட்டும் அனுபவித்து, ஏற்றுக்கொள்ளுமாறு மிகத் தாழ்மையுடன் வேண்டுகிறேன்.

இந்த அபங்கங்களில் உள்ள உபதேசங்களெல்லாம் இறைவனால் தம் அடியார் மூலம் நமக்கு அருளப் பெற்றதாகவே நினைத்து பரோபகாரம், நாம ஸ்மரணை, ஸத்ஸங்கம் இவற்றில் நாம் ஈடுபட்டு நலம் பெறுவோமாக.

வெ. நாராயண பந்த்
(ஆசிரியர்)

# பக்த நாமதேவர்

பக்த நாமதேவரின் சரித்திரம் மற்றும் அவர் பாடிய சில அபங்கங்கள் (உரையுடன்) அடியே னால் ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ளது. எனினும் அவரைப்பற்றி பௌராணீக ரீதியில் இல்லாமல் சில யதார்த்த உண்மையின் பேரிலும், அவருடைய பல பாடல்களை ஆதாரமாகக் கொண்டும் சில நூலாசிரியர்கள் அவரைப் பற்றிய பல செய்திகளை எழுதியிருக்கிறார்கள்.

அவர் பிறந்த வருடமும் மறைந்த வருடமும் தெளிவாகத் தெரியவில்லை என்று நவநீதம் (பல அடியார்களின் அபங்கங்கள் அடங்கியது) என்ற புத்தகத்தில் (கி.பி.1889ம் பதிப்பு) கூறப் பட்டுள்ளது. எனினும் ஜகன்னாத ரகுநாத ஆளகாவ்கர் எனும் ஆசிரியர் தமது புத்தகத்தில் நாம தேவரின் பிறந்த வருடம் சக ஆண்டு 1192 (கி.பி.1270), உடலை நீத்த வருடம் சக ஆண்டு 1272 (கி.பி.1350) என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஞானதேவர், கோரா கும்பார், சாங்க தேவர், ஜகமித்ர நாகா, சோகாமேளா, நரஹரி ஸோனார், ஸாவந்த மாளீ, விஸோபா கேசர் முதலிய ஸாதுக்களெல்லோரும் நாமதேவரின் சம காலத்தவராவர்.

தையற்கார குலத்தில் பிறந்திருந்தும் மற்ற ஸாதுக்களுடன் இருந்து கொண்டு, விட்டலனி டம் அபார பக்தி பூண்டு அவனருளையும் பெற்றிருந்தார் நாமதேவர். மஹாராஷ்டிரத்தில் பாக வத தர்மத்தின் பிரசாரத்தையும் செய்தார். பாண்டுரங்கன் என்று சொல்வது குறைந்து 'விட் டல' என்று எங்கும் ஒலிக்க ஆரம்பித்தது நாமதேவரால்தான் என்ற கருத்து நிலவுகின்றது.

ஆயிரக்கணக்கான அபங்கங்களை பாடி ஸாதாரண எளிய மக்களை அறநெறியில் ஈடுப டுத்தியவர் நாமதேவர். மஹீபதி எழுதிய பக்த விஜயத்தில் அவரால் நிகழ்த்தப்பட்ட அற்புதங் கள் விவரிக்கப்பட்டுள்ளன.

இறைவனின் பூரண அருளில் திளைத்திருக்கும்போது அற்புதங்களுக்கு என்ன குறைவு? அருளாளர் என்பதால்தான் அவர் நாமம் இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இனியும்தான் என்பதில் சந்தேகமில்லை.

# ஸந்த துகாராம் மஹாராஜ்

ஸ்ரீதுகாராம் ஸ்வாமிகளின் சரித்திரத்தையும் அவர் இயற்றிய அபங்கங்களின் தமிழ் மொழி பெயர்ப்பை இரண்டு புத்தகங்களாக ஏற்கனவே வெளியிட்டுள்ளேன். எனினும் அவரைப் பற்றி சில வார்த்தைகள் கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஸ்ரீ துகாராம் ஸ்வாமிகள் மஹாராஷ்டிரா மாநிலத்தில் தேஹூ எனும் சிற்றூரில் கி.பி.1608ம் ஆண்டில் பிறந்தார். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரின் முன்னோர்க

ளில் ஒருவரான விஷ்வம்பர் என்பவர் நாம தேவரின் காலத்தில் வாழ்ந்தவராவார்.

துகாராமின் இல்வாழ்க்கை இனிமையாக அமையவில்லை என்றே அவர் சரித்திரம் கூறுகிறது. நாட்டில் அவ்வப்போது தோன்றிய பஞ்சத்தினால் குடும்பம் நடத்துவதற்கு மிகவும் கஷ்டப்பட்டார் அவர். எனினும் விட்டலனிடம் தீவிர பக்தி பூண்டிருந்தார். ஸாதுக்கள் உலகின் துன்பங்களையெல்லாம் வைர நெஞ்சுடன் பொறுத்துக் கொள்வர் என்று அவரே பாடியிருக்கிறார்.

சத்ரபதி சிவாஜி மஹாராஜா ஆண்ட காலம். அவர் துகாராம் ஸ்வாமிகளுக்கு கொடுத்தனுப்பிய செல்வமெல்லாவற்றையும் திருப்பியனுப்பிவிட்டார் துகாராம். உலக விஷயங்கள் சம்பந்தமான உணர்வுகளையெல்லாம் உதறிவிட்டு இறைவனிடமே பக்தியை தீவிரமாகச் செலுத்தினார். தான் உய்வதற்கு அவன் அருளை வேண்டினார். உயர் குடிமக்களால் பல இன்னல்களுக்கு ஆட்பட்டாரெனினும் எல்லாவற்றையும் பொறுமையுடன் சமாளித்து, தான் ஒரு உண்மையான பாகவதன் என்பதைக் காட்டினார்.

சமூகத்தில் காணப்பட்ட உயர்வு, தாழ்வு எனும் பேத புத்தி, ஒழுக்கக் குறைவு முதலியவற்றைத் துணிந்து கண்டித்தார். விட்டலனை தனக்கு அன்னியனாக எப்போதும், எந்தச் சூழ்நிலையிலும் கருதாமல் தன் குறைகளையெல்லாம் அவனிடமே முறையிடுவதை அவர் பாடிய பல அபங்கங்களில் காணலாம்.

கண்ணனின் லீலைகள் பற்றியும் அத்யாத்ம உணர்வில் ஏராளமாகப் பாடியுள்ளார். பாகவதம், பகவத் கீதை இவற்றைத் தீவிரமாக ஆராய்ந்தவர் இவர் என்பது இவருடைய பாடல்களிலிருந்து புலனாகும்.

வடமொழியில் உள்ள பகவத் கீதையை மராட்டியில் அபங்க ரூபமாகப் பாடியுள்ளார். துகாராம் கி.பி.1650ல் பூதவுடலுடன் வைகுண்டம் ஏகியதாகப் பல பாடல்கள் உள்ளன. கிட்டத்தட்ட 350 ஆண்டுகள் சென்ற பின்னரும் துகாராம் ஸ்வாமிகளின் அபங்கங்களைப் பண்டரீபுரம் செல்லும் யாத்திரிகர் கூட்டம் (வாரகரி ஸம்பிரதாயத்தவர்) உற்சாகத்துடன் தாளா, வாத்தியங்களுடன் பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும் செல்வதை எல்லோரும் அறிவர்.

துகாராமின் சில அபங்கங்கள் பிரெஞ்சு மொழியில் (1956ல்) மொழியாக்கம் செய்யப்பட்டிருப்பதான செய்தி (ஹிந்து நாளிதழ் துணைப்பதிப்பில் 21.9.2001) வெளியாகியுள்ளது.

## ஸத்குரு ஸ்ரீஏகநாத ஸ்வாமி மஹாராஜ்

ஸ்ரீஏகநாதர் பைடன் நகரில் ஸுரிய நாராயண பந்த், ருக்மணிபாய் இத்தம்பதியருக்கு கி.பி.1528ல் பிறந்தார். இவருடைய கொள்ளுத் தாத்தா ஸந்த பானுதாஸர் ஆவார்.

ஏகநாதர் பிறந்த சிறிது காலத்திலேயே பெற்றோரை இழந்தார். பாட்டனாரான சக்ரபாணியிடம் வளர்ந்து வந்தார். மஹாராஷ்டிர அந்தண குலத்தில் தோன்றிய இவர், சிறுவயது

முதற்கொண்டே கல்வியிற் சிறந்தவராக இருந்தார். ராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை நன்கு பயின்றார்.

தேவகிரியில் வசித்து வந்த, 'ஜனார்தன ஸ்வாமி' என்று எல்லோராலும் போற்றப்பட்ட மகானிடம் ஏகநாதர் சென்று மந்திர தீக்ஷை அருளிட வேண்டினார். மகா தேஜஸ்வியாக விளங்கிய ஏகநாதரை தமது சிஷ்யராக ஏற்றுக் கொண்டார் ஜனார்த்தன ஸ்வாமி. இவ்வாறு ஏகநாதருக்கு குரு ஸேவை செய்யும் பேறு கிடைத்தது.

ஒருநாள் ஏகநாதரை குருவானவர் அருகிலிருந்த ஒரு காட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கு குரு தத்தாத்ரேயரின் தரிசனத்தையும் அருளையும் பெறச் செய்தார்.

குரு தத்தரின் அருளாசி கிடைத்தவுடன் ஞானத்தின் ஆழத்தையடைந்தார் ஏகநாதர். பிறகு தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு பைடன் நகருக்கு திரும்பினார். அங்கு பெரியவர்களின் விருப்பப்படி கிரிஜாபாய் என்ற மாதை மணந்தார். உத்தவர் எனப் பெயர் கொண்ட ஒருவர் ஏகநாதருக்கு சிஷ்யராக இறுதிவரையில் சேவை புரிந்ததாக சரித்திரம் சொல்கிறது.

ஒரு வியாபாரி கொண்டு வந்த விட்டல, ருக்மணி சிலைகளைத் தன் இல்லத்திலேயே ப்ரதிஷ்டை செய்தார். ஸரஸ்வதி தேவியின் பூர்ண கடாக்ஷம் ஏகநாதரிடம் இருந்தது. இவர் மராட்டி மொழியில் பல நூல்கள் எழுதினார். மிகவும் பிரசித்தி பெற்ற ஏகநாத பாகவதம், 31 அத்தியாயங்களையும் 18,798 ஸ்லோகங்களையும் (ஓவி நடையில்) கொண்ட நூலாகும். இது பாகவத மஹாபுராணத்தின் 11வது காண்டத்திலுள்ள 1365 வடமொழி ஸ்லோகங்களுக்கு விரிவுரையாகவும் ஞானேஸ்வரரின் பகவத் கீதை விரிவுரையின் விளக்கமாகவும் அமைந்துள்ளது. மேலும் சுமார் 40,000 ஸ்லோகங்களைக் கொண்ட (இதுவும் ஓவி நடையில்) 'பாவார்த்த ராமாயணம்' எனும் நூலை இயற்றியுள்ளார். பாராயணம் செய்வதற்குரியதாகும் இது.

மராட்டி மொழியின் வளர்ச்சிக்கு ஏகநாதர் ஆற்றிய பங்கு மிகப்பெரிதாகும். இவருக்கு ஹரி என்ற மகனும் கோதாவரி, கங்கா என்று இரு புதல்விகளும் இருந்தனர். ஏகநாதருடைய பெண் வயிற்றுப் பேரன்தான் முக்தேஷ்வர் எனப் பெயர் கொண்ட மஹாகவியாவார்.

ஸ்ரீஏகநாத ஸ்வாமிகள் கி.பி.1599ம் ஆண்டு கிருஷ்ண பஜனையில் மூழ்கியிருக்கும்போது இறைவன் திருவடியை அடைந்தார். இவர் எழுதிய ஏகநாத பாகவதத்தின் மூலப் பிரதியானது கங்கைக் கரையில் அதற்காகவே நிர்மாணிக்கப்பட்ட ஒரு சிறிய ஸமாதி கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. அதனை பக்தர்கள் வழிபட்டு வருவதாகவும் கூறப்படுகிறது.

நாம ஸ்மரணைக்கு ஒரு துகாராம் -ஞானத்திற்கு ஒரு ஏகநாதர் எனும் பொருளில் "நாமாசா துகா, ஞானாசா ஏகா" என்று சொல்வது இன்றும் வழக்கத்திலுள்ளது.

– புண்டலீக வரத ஹரி விட்டல

வெ. நாராயண பந்த்

# துகாராம் அபங்கங்கள்

1. *ஸுகே1 கா2வே அன்ன த்யாசே க1ராவே சிந்தன*
*1த்யாசே(ம்) திலே(ம்) 1த்யாஸீ -*
*பா1வே ப2ள ஆப1ணாஸீ ஆஹே*
*ஹா ஆதா4ர - நாமத்யாசே(ம்) விஸ்வம்பர*
*நாஹீ ரிதா1 டா2வ - துகாம்ஹனே ப1ஸரீ பா4வ*

"நன்றாக உண்டு சுகமாக இறைவனை மனதில் நினையுங்கள். அவன் அருளிய உணவு அவனுக்கே அர்ப்பணமாகுமிடத்து நமக்கு அதுவே பயனளிக்கும். இவ்வுலகையே பரிபாலனம் செய்பவனாக இருப்பதால்தான் பகவான் 'விஸ்வம்பரன்' எனப்படுகிறான். இது ஆதார பூர்வமானது. அவன் இல்லாத இடமே இல்லை என்று நம் உணர்வும் விரிவடைய வேண்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய் எண்ணிறந்தெல்லை இலாதானே"**

*- திருவாசகம்.*

2. *ஸங்கோ1 சோனி கா1ய ஜாலாஸீ லஹான*
*கே4யீ அபோ1சன ப்ரம்மாண்டாசே*
*க1ரோனீபா1ரணே ஆஞ்சவே ஸம்ஸாரா*
*உசீர உசிரா லாஹூ நகோ1*
*க4ரகு1லானே ஹோதா ப1டிலா அந்தா4ர*
*தே1ணே கே1லே யா1ர கா1ஸா வீஸ*
*ஜுகா3ருனீது3ரீ லபவிலே கா1கே2*
*துகாம்ஹணே வாகே2 கெ1ள1துகா1சே*

உன் சித்தத்தை குறுக்கிக் கொண்டு ஏன் சிறியவனாக (எளியவனாக) இருக்கிறாய்? இறைவனை மனதில் இருத்திக் கொண்டு இந்த பிரம்மாண்டத்தையே ஆனந்தமாக அடைந்து இல்வாழ்க்கையிலிருந்து அகன்றுவிடு. இதில் மெத்தனம் வேண்டாம். தேகாபிமானம் எனும் அக்ஞானத்தில் இந்த இருண்ட சிறிய வீட்டில் இருந்து கொண்டு மிக்க கலக்கமடைகிறாயே? குழந்தையிடம் ஒரு பொருள் மாயமாக மறைந்துவிட்டதாக அதைக் கையில் ஒளித்து வைத்திருக்கும் தாய் விளையாடுவது உண்டே? அதைப் போல இறைவன் நாம் அறியாதபடி ஒரு மாயாஜாலம் செய்கிறான் என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பேரின்ப வெள்ளத்துட் பெய் கழலே சென்று. பேணுமினே"

- *திருவாசகம்*

*ஜ்3யாஸே1 ஜ்3யா த்1யான தே1ஞ்சி ஹோய த்1யாஸே மன*
*ம்ஹணவுனி அவகே4 ஸாரா -பாண்டுரங்க த்3ரு4டத4ரா*
*ஸம கூ2ண ஜயாஸே பா1ய -உபா4 வ்யாப1க விடேடா4ய*
*துகாம்ஹணே நபா4 -ப1ரதா1 அணுஸாஹீ கா3பா4*

"மனதில் ஒன்றையே நினைத்துக் கொண்டிருக்க மனமும் அப்படியாகி விடுகின்றது. ஆகையினால் உலக விஷயங்களில் அதிகம் ஈடுபடாமல் பாண்டுரங்கனையே திடமாகப் பற்றி அவனையே நினையுங்கள். செங்கல்லின் மீது தன் இணையடிகளை வைத்துக் கொண்டு நிற்கும் அவன்தான் உலகம் முழுவதும் பரந்துள்ளான். ஆகாயத்தைக் காட்டிலும் விரிந்தவன்! அணுவைக் காட்டிலும் நுண்ணியன்! அவனே நம் இதயத்தில் குடி கொண்டவனுமாவான்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"வேதங்கள் ஐயாவென ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே"

- *சிவபுராணம்*

4. *ஸம்ஸார ஸோஹளே போ4கி3தீ ஸகள*
*ப4க்தா த்1யாஸே1 ப3ள விடோபா3ஸே*
*ப4ய சிந்தா தா4க1 ந மானிதீ மனீ*
*ப4க்தா1 சக்ரபாணீ ஸாம்பா4ளீத1*
*பா1ப1 பு1ண்ய த்யாஞ்சே த4ரு நசகே1 அங்க*
*பக்தாஸீ ஸ்ரீரங்க ஸர்வ பா4வே*
*நவ்ஹ1தீ தே1 முக்த ஆவடே3 ஸம்ஸார*
*தேவ த்யாசா பா4ர ஸகள வாஹே*
*துகாம்ஹணே தேவ பக்தா வேளாயீத*
*பக்த தே1 நிச்சிந்த1 1த்யாசியானே"*

"இல்வாழ்க்கையை முறையாக அனுபவிக்கும் பக்தர்களுக்கு விட்டலனின் துணை உள்ளது. தனது பக்தர்களை சக்ரபாணியானவன் பராமரிப்பதால் அவர்கள் மனதில் பயமோ, கவலையோ அற்றவராகின்றனர். தம் முழு பாவனையும் அந்த ஸ்ரீரங்கநாதனிடம் வைப்பதால் அவர்களின் உடலை பாப புண்ணியங்கள் தொடுவதில்லை. இந்தப் பக்தர்கள் முக்தியை நாடுவதில்லை. தங்களது யோக க்ஷேமத்தை இறைவன் ஏற்பதாலும், அவனே தங்களுக்குப் பாதுகா

வலனாக இருப்பதாலும் கவலை ஏதுமின்றி இல்வாழ்க்கையையே விரும்புகி றார்கள்" என்கிறார் துகாராம்ஸ்வாமிகள்.

"ஈசன் அருளால் உனது உலக வாழ்க்கை நிகழ்ந்து வருகிறது என்று உணர் -அப் பொழுது உனக்கு இடுக்கண் ஒன்றும் வராது"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

5. ஆம்ஹா க்ரீ ஏக் கா்ய துப்தா்ஹே
பா்ன்ஹா ந ஸமாயே த்ரிபு்வனீ
வான தே் ஸாவளீ நாவதே் ஸ்ரீ தரா
ச்ரே வஸுந்த்ரா சௌதா் பு்வனே
வத்ஸ நாஹீ மாய ப்லத்யா ஸவே ஜாய
கு்ர்வாளீ தோ் லாஹே பா்வப்ரணா
சஹு தா்ரீ க்ஷீர வோளலீ அமுப்
தா்ளே ஸனகா்திக ஸித்த முனீ
துகா ம்ஹனே மாஜீ பூ்க் தே் தே் கா்ய
ஜோகா்விதே் மாய தி்ன்ஹீ லோகா

"என் வீட்டில் பால் சுரக்கும் காராம்பசு ஒன்றுள்ளது. மூவுலகத்திலும் அதன் பாலிற்கு ஈடு கிடையாது. கருமை நிறம் கொண்ட அப்பசுவின் பெயர் ஸ்ரீதரன். பூவுலகம் மற்றும் பதினான்கு புவனங்களிலும் அது மேயும். அப்பசு விற்கு ஈன்ற கன்று ஒன்றுமில்லை. ஏதாவதொரு பக்தனுடன் அது செல்லும். அதை அன்புடன் தடவிக் கொடுப்பனுக்கு திருப்தியடையும்வரை பாலைச் சுரக்கும். அதன் நான்கு காம்புகளின்றும் (பக்தி, ஞானம் எனும்) அபரிமித் பால் சுரக்கும். அதனைப் பருகி ஸனகாதி முனிவர்கள், சித்தர்கள் எல்லோரும் திருப்தியடைந்துள்ளனர். இவ்வாறு அந்தப் பசு மூவுலகத்தையும் போஷிக்கி றது. அதனிடம் எவ்வளவுதான் என் பசியைத் தீர்ப்பேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா விழுப்பொருளே உன தொழுப்படி யோங்கள் மண்ணகத்தே வந்து வாழச்செய்தானே"

- திருவாசகம்

6. நகோ் ப்ரம்ம ஞான ஆத்ம ஸ்தி்தி் பா்வ
மீ பக்த தூதே்வ ஐஸே க்ரீ
தா்வீ ரூப் மஜ கோபிகா ரமணா
டே்வூ தே் சரணா்வரீ மாதா்

*பா$^{1}$ஹீன ஸ்ரீமுக$^{2}$ தே$^{1}$யீன ஆலிங்க$^{3}$ன*
*ஜீவே நிம்பலோண உத$^{1}$ரீன*
*பு$^{1}$ஸதா$^{1}$ ஸாங்கே$^{3}$ன ஹித$^{1}$கு$^{3}$ஜமாத$^{1}$*
*பை$^{3}$ஸோனி ஏகாந்த$^{1}$ ஸுக$^{2}$ கோஷ்டீ*
*துகாம்ஹணே யாஸீ ந லாவீ உசீர*
*மாஜே அ$^{4}$ப்யந்த$^{1}$ர ஜாணோனியா*

"இறைவா! எனக்கு ப்ரும்ம ஞானமோ, ஆத்மானுபவமோ தேவையில்லை. நான் உன் பக்தன், நீ என் இறைவன் என்று இருப்பதையே எனக்கு அருள்வாயாக. கோபிகா ரமணா! நீ உன் உருவத்தைக் காட்டுவாயாகில் உனது காலடிகளில் என் தலையை வைத்திடுவேன். உன் திருமுகத்தைப் பார்த்து உன்னைக் கட்டி அணைத்திடுவேன். என் ஜீவனையே உன்னைச் சுற்றிப் போட்டிடுவேன். இறைவா! நீ கேட்பாயாகில் தனிமையில் உன்னிடம் என் சுக துக்கங்களையெல்லாம் சொல்லிடுவேன். என் அந்தரங்க சுத்தியை அறிந்து என் வேண்டுகோளை தாமதமின்றி நிறைவேற்றுவாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"பக்தன், பகவான் என்னும் சர்க்கரையை ரசித்து அருந்த விரும்புகிறான். தானே சர்க்கரையாக அவன் விரும்புகிறதில்லை"**

**- ஸ்ரீ ராமகிருஷ்ணர்**

7. *சி$^{1}$த்$^{1}$தீ(ம்) த$^{4}$ரீன மீ பா$^{1}$வுலே ஸுகுமார*
*ஸகள பீ$^{1}$டா$^{4}$ர ஸம்பத்தீஞ்சே*
*கண்ட$^{2}$டீ த$^{4}$ரீன மீ நாம அம்ருதாசீ வல்லி*
*ஹோயில ராஹிலீ சீத$^{1}$ளத்த$^{1}$நு*
*பா$^{1}$ஹேன ஸ்ரீமுக ஸாஜிரே ஸுந்த$^{3}$ர*
*ஸ$^{1}$களா ஆக$^{3}$ர லாவண்யாசே(ம்)*
*க$^{1}$ரீன அங்க$^{3}$ஸங்க$^{3}$ பா$^{3}$ளகா$^{1}$சே ப$^{1}$ரீ*
*பை$^{3}$ஸேன தோ$^{1}$வரீ நுத$^{1}$ரீ க$^{1}$டி$^{3}$யே*
*துகாம்ஹணே ஹாகேலா தைஸா ஹோய*
*த$^{4}$ரிலீ மனே ஸோய விடோ$^{2}$பா$^{3}$சீ*

"மோக்ஷம் முதலிய எல்லா ஸம்பத்துக்களுக்கும் இருப்பிடமாக இறைவனின் சரணங்கள் உள்ளன. அந்த ஸுகுமாரனின் காலடியை என் சித்தத்தில் கொண்டிடுவேன். ஸ்ரீ ஹரியின் நாமமாகிய அமிர்தக் கொடியை என் கழுத்தில் சூடிட (த்ரிவித தாபங்களால் தகிக்கும்) எனது சரீரமானது குளுமை

பெறும். ஸகல அழகும் பொருந்தியுள்ள அவனது திருமுகத்தைக் கண்டு சிறு குழந்தைபோல அவனைக் கட்டிப்பிடித்து அவனது இடுப்பில் ஏறிக் கொண்டு கீழே இறங்க மாட்டேன். நாம் எப்படியெல்லாம் இருக்கிறோமோ அதே பாவனையில் அவனும் இருக்க, என் மனதில் அவன் உறவைக் கொண்டுள்ளேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"சிராப்பள்ளி குன்றுடையானைக் கூற என் உள்ளம் குளிருமே"**

**- *திருஞான சம்பந்தர்***

*9. து$^{1}$ஜா சரணாக$^{3}$த$^{1}$ ஜாலோ மீ அங்கித$^{1}$*
*க$^{1}$ரீமாஜே ஹித$^{1}$ பாண்டுரங்கா*
*பதித பாவன தும்ஹீ ப$^{3}$ரிதா$^{3}$வளீ*
*தே ஆதா ஸாம்பா$^{4}$ளீ மாய பா$^{3}$பா$^{1}$*
*அனாதா$^{2}$ச நாத$^{2}$ போ$^{3}$லதீ$^{1}$ல ஸந்த$^{1}$*
*ஐகோ$^{1}$னியா மாத$^{1}$ விஷ்வாஸலோ*
*ந க$^{1}$ராவீ நிராஸ ந த$^{4}$ராவே உதா$^{3}$ஸ*
*தே$^{3}$யீ யாசகா$^{1}$ஸ க்ருபா$^{1}$ தான*
*துகாம்ஹணே மீதோ$^{1}$ பா$^{1}$த$^{1}$கா$^{1}$ஞ்சீராஸீ*
*தேயீ பா$^{1}$யா பா$^{1}$சீ டா$^{2}$வ தேவா*

"ஹே பாண்டுரங்கா! உன்னையே சரணடைந்த உன் வேலையாளாக இருப்பதினால் எனக்கு ஹிதமானதைச் செய்வாயாக. தாய் தந்தையாகிய இறைவா! 'பதித பாவனன்' எனும் உன் புகழைக் காப்பாற்றிக் கொள். ஆதரவறறவர்களை ஆதரிப்பவன் என்று உன்னை ஸாதுக்கள் சொல்கின்றனர். அந்த நம்பிக்கையை நிராசையாக்கி ஒதுக்கிவிடாமல், இந்த எளியேனுக்கு க்ருபை எனும் தானத்தை அளிப்பாயாக; பாவங்கள் நிறைந்த எனக்கு உனது காலடியில் இடம் கொடுப்பாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**பகவானிடத்தில் சாண் புகுந்தால் வினைப்பயன் தானாகத் தேய்ந்தொழிந்து போகிறது."**

**- *ஸ்ரீ ராமகிருஷ்ணர்***

*9. த$^{3}$யா க்ஷமா சாந்தீ*
*தேதே தே$^{3}$வாசீ வஸ$^{1}$தீ*
*பா$^{1}$வே தா$^{4}$வோனியா(ம்) க$^{4}$ரா*
*ராஹே த$^{4}$ருனீயா தா$^{2}$ரா*
*கீர்த்தனாசே வாடே$^{1}$*

*ப்[3]ராடி[3]யா ஐஸே லோடே[1]*
*துகாம்ஹனே க்[4]டே[3]*
*பு[1]ஜா நாமே தேவ ஜோடே[3]*

"தயவு, மன்னிக்கும் குணம், சாந்தம் இவை இருக்குமிடத்தில்தான் இறைவன் உள்ளான். அந்த இடத்தை ஓடிச் சென்றடைந்து அங்கேயே இருந்திடுவான். கீர்த்தனத்தில் ஆசை கொண்டு பஞ்ச காலத்தில் பசியால் வாடுபவன் உணவைக் கண்ட மாதிரி ஓடிவருவான். நாம ஸ்மரணத்தை பூஜையாகக் கொண்டு, தன் பக்தனை அடைகிறான் இறைவன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளுமாறே"

*- அப்பர்*

10. *போ[3]லே தை[1]ஸா சாலே*
*த்[1]யாசீ வந்தீன பா[1]உலே*
*அங்கே[3] ஜாடீ[3]ன அங்க[3]ண*
*த்[1]யாசே தா[3]ஸத்வ க[1]ரீன*
*த்யாசா ஹோயீன கி[1]ங்கர*
*உபா[4] டா[1]கே[1]ன ஜோடோ[3]னி க[1]ர*
*துகா ம்ஹணே தேவ*
*த்யாசே சரணீ மாஜா பா[4]வ*

'சொல்வது போல (உபதேசிப்பது போல) நடப்பவரின் பாதங்களை வணங்கிடுவேன். அவருடைய வீட்டு முற்றத்தை என் உடல் கொண்டு பெருக்கி, சுத்தம் செய்வேன். மேலும் அவருக்கு சேவை புரிய கைகட்டி வேலைக்காரனாக அவர் முன் நிற்பேன். இறைவா! இம்மாதிரியானவரின் சரணங்களில் என் உணர்வு முழுவதும் இருக்கும்' என்கிறார் துக்காராம் ஸ்வாமிகள்.

பிருந்தாவனத்திற்கு யாத்திரை சென்றவர் அங்குள்ள புரோகிதர் முதலியவர்களுக்கு மறுநாள் தானம் கொடுப்பதாகக் கூறி அன்றிரவே ஊருக்கு வந்துவிட்டதை கேட்ட ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், "வெட்கமாக இல்லை? சொல்வது ஒன்று செய்வது மற்றொன்று இப்படி நடந்து கொள்வது நியாயமா?" என்று கேட்டு அவரை திரஸ்கரித்தாராம்.

*- ராமகிருஷ்ண பரமஹம்ஸர்*

11. *ஹாமீ ஆலோம் ஹணே கோ[1]ணீ பு[3]ட[3]த[1]யா*

தே1ணேகிதீ த1யா ப3ள சடே4
து1 ம்ஹீ மாஜா பா4ர கே4த1லா ஸக1ள
ஆஷ்வாஸிலோ பா3ள அப4யகரே
பு4கே1லியா ஆஸ தா3வீதா1(ம்) நிர்த்3தா4ர
கி1தீ1 ஹோய தீ4ர ஸமாதா4ன
துகாம்ஹனே தி3லீ சிந்தாமணீ ஸாடீ2
உசி1த காச1வடீ த3ண்ட3வத

"ஜலத்தில் முழுகுபவனைப்பார்த்து, 'இதோ நான் வந்துவிட்டேன்' என்று ஒருவன் சொல்ல மூழ்குபவனுக்கு சற்று பலம் வருமே! என்னுடைய சுமையெல்லாவற்றையும் நீ ஏற்றாய். உன் அபய கரத்தைப் பார்த்து நிம்மதியடைந்தேன். பசித்தவனுக்கு உணவு கிடைத்திட அவன் திருப்தியடைவதுபோல உன்னுடைய அடைக்கலம் கிடைத்திட மனது ஸமாதானமடைந்ததே! சிந்தாமணி போன்றதை (உயர்ந்த நலனை) எனக்கு நீ கொடுக்க நானோ பதிலுக்கு பீங்கான் துண்டு ஒன்றைக் கொடுப்பதுபோல நெடுஞ்சாண் கிடையாக உனது காலடியில் விழுகிறேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"தந்தது உன்றன்னை! கொண்டது என்றன்னை! சங்கரா! ஆர் கொலோ சதுரர்?"
- மாணிக்கவாசகர்

13. ஸமர்த்தா2சே பா3ளகீ1 விலவாணே தி3ஸே
த1ரீ கோ1ணா ஹான்ஸே ஜன தேவா
அவகு3ணீ ஜரீ ஜாலே தே1 ஓங்க3ள
கராவா ஸாம்பா4ள லாகே3 த்யாசா1
துகாம்ஹணே தைஸா மீ ஏக ப1தித
ப1ரி முத்ராங்கித1 ஜாலோ தூஜா

'வல்லமை பெற்றவனின் பிள்ளை தீனனாக இருந்தால் ஜனங்கள் யாரைப் பார்த்து சிரிப்பர்? குணங்கெட்டவனாக, பொல்லாதவனாக அவன் இருப்பின் எப்படியாவது அவனை சமாளிக்க வேண்டியதுதான். அப்படி ஒரு பதிதனாகி விட்ட என்னை இறைவா! நீதான் காப்பாற்ற வேண்டும். நான் உன்னுடையவன் என்ற முத்திரையைப் பெற்றுள்ளேன்' என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து
பாழுக்கே நீர் இறைத்தேன்
உற்றலால் கயவர் தேறார்

என்னும் கட்டுரையோடு ஒத்தேன்"

- *திருநாவுக்கரசர்*

13. *டே2ங்க1ணாசே ஸங்கே3 ஹிரா ஜோ ப4ங்க3லா*
*குஸங்கே3 நாட3லா ஸாது தைஸா*
*வோடா4ளாசே ஸங்கே3 ஸாத்வீக நாட3லே*
*க்ஷண ஏக நாஸலே ஸமாக3மே*
*துகாம்ஹணே த4ரா ஸத்ஸங்கஹா ப3ரா*
*சு1கே1ல தோ1 பே2ரா சௌர்யான்சீசா1*

'மூட்டைப் பூச்சிகளின் கூட இருந்தால் வைரம் கெட்டுவிடுமா என்ன? கெட்டவர்கள் சூழ்ந்திருந்தாலும் ஸாதுக்கள் ஏமாற மாட்டார்கள். ஒரு க்ஷணம் கூட தீங்கடைய மாட்டார்கள். ஆகையால் ஸத்ஸங்கத்தில் இருப்பது நலம். இல்லையெனில் பிறவிச்சுழலில் சிக்க வேண்டியதுதான்' என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"இடையறாத சத்ஸங்கம் வேண்டும். சான்றோர், தங்களுடன் பழகுபவர்களை தெய்வத்திற்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றனர்."

- *ஸ்ரீ ராமகிருஷ்ணர்*

14. *பதி1த மீ பாபீ ஜாலோ து1ஜ*
*ரா2கீ மாஜீ லாஜ பாண்டுரங்கா*
*தா1ரியேலே பக்த நகளே து1ஜா அந்த*
*தோ2ர மீ பதி1த1 பாண்டுரங்கா*
*த்ரௌபதீ ப3ஹீண வைரீ கா3ன்ஜீயேலீ*
*ஆப1ணா ஐஸீ கே1லீ பாண்டுரங்கா*
*ப்ரஹ்லாதா3 கா1ரணே ஸ்த1ம்4பீ அவதா1ர*
*மாஜா கா விஸர பாண்டுரங்கா*
*ஸுதா3மா ப்ராம்மண தரித்3ரே வ்யாபீலா*
*ஆபணா ஐஸா கே1லா பாண்டுரங்கா*
*துகாம்ஹணே துஜ சரண நிஜபா4வே*
*பாப நிர்தா3ளாவே பாண்டுரங்கா*

'உன்னுடையவனான நான் பாவியாகிவிட்டேன். இந்த வெட்கக் கேட்டிலிருந்து என்னைக் காப்பாற்றுவாயாக. பக்தர் பலரை நீ கரையேற்றியுள்ளாய். ஆனால் பாண்டுரங்கா! நான் பெரும்பாவியானேன். தங்கை திரௌபதியை எதிரிகள் துன்புறுத்தும்போது நீ காப்பாற்றவில்லையா? பக்த ப்ரஹ்லாதனுக்

ந் காக கம்பத்தில் அவதரித்தாயே? பாண்டுரங்கா! என்னை மட்டும் ஏன் மறந்தாயோ? ஏழை அந்தணன், குசேலரைக் காத்தாயே பாண்டுரங்கா! நான் உன்னை உண்மையான பாவனையுடன் சரணடைகின்றேன். என் பாவங்களை அழிப்பாயாக' என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"மற்றுப் பற்று எனக்கின்றி நின்திருப்பாதமே மனம் பாவித்தேன்"

- சுந்தரமூர்த்தி நாயனார்

15. ஆதா1(ம்) தே3வா ஐஸா க1ரீ உபகா1ர
தேஹாசா வீஸர படோ3 மாஜ்யா
த1ரீச ஹா ஜீவ ஸுக2 பா1வே மாஜா
ப3ரவே கேசவ ராஜா க1ளோ ஆலே
டா2வ தேயீ சித்தா ராகே2 பாயாம் பா1சீ
ஸகள வ்ருத்தீம்சி அக2ண்டி3த
ஆஸ ப4ய லாஜ சிந்தா1 கா1ம க்ரோத4
தோடா3 வா ஸம்பந்த யாஞ்சா மாஜா
மாக3ணே ஹே தேவா துஜ ஏக ஆதா1(ம்)
நாம முகீ ஸந்த ஸங்க தே3யீ
துகாம்ஹணே நகோ வரப1ங்க3 தேவா
கே4யீ மாஜீ ஸேவா பா4வ சுத்த

"இறைவா! இந்த என்தேகத்தை நான் மறப்பதான உதவியைச் செய்வாயாக. அப்போதுதான் எந்தன் ஜீவன் சுகமடையும் என அறிவேன். கேசவராஜனே! என் சித்தம் உன் காலடியில் இருக்க இடம் கொடுத்துக் காப்பாற்றுவாயாக. பலவித மன விகாரங்களான ஆசை, பயம், வெட்கம், கவலை, காமம், க்ரோதம் இவைகளின் ஸம்பந்தத்தை அறுத்துவிடுவாயாக. இறைவா! இப்போது உன்னைக் கேட்பதெல்லாம் நாவில் உன் நாமத்தைச் சொல்ல வேண்டும், ஸாதுக்களுடன் இருக்க வேண்டும், மேற்போக்காகயின்றி அந்தரங்க சுத்தியுடனான் என் சேவையை நீ ஏற்க வேண்டும் என்பதுதான்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"ஆண்டனை அடியேனை ஆளாக் கொண்டு"

- அப்பர் ஸ்வாமிகள்

16. தி1வாஸீயா லோ3ட டா1கூ1வீ பை3ஸஸீ
தண்ட4 தோ1 க1ரீஸீ அனாதா2 தே(ம்)
அனாதா2ஸீ துக்க தே3சீ ஸர்வ காள

*ஐஸீ து'ஜ வேள புடே' ஆஹே*
*ஆஹே நாஹீ கா'ய ந க'ரீ விசார*
*கா'யதூ பாமர ஜன்மலாஸீ*
*துகாம்ஹணே த'ரீ ஏக பூ'த தயா*
*அஹந்தா தே' வாயா ந த'ரீ மனீ*

"மெத்தை திண்டுகள் மீது அமர்ந்து ஆதரவற்றவர்களை தண்டித்து அவர்களுக்கு எப்போதும் துக்கத்தையே கொடுப்பாயாகில் உனக்கும் பின்னால் இப்படி ஒரு கஷ்ட நிலை வரும் என்று நீ நினைத்துப் பார்ப்பதில்லை. இப்படிப் பாமரனாக ஏன் ஜன்மம் எடுத்துள்ளாய்? மனதில் அகந்தை கொள்ளாமல் எல்லா ஜீவன்களிடமும் தயை காட்ட வேண்டும் என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

"அகம் நெகாதவரைக்கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே"

- *திருவாசகம்*

"தாயாய் முலையைத் தருவானே தாராதொழிந்தாற் சவலையாய் நாயேன் கழிந்து போவேனே! நம்பியினித்தான் நல்குதியே"

- *திருவாசகம்*

17. *நகோ' ஜாஹூ தே'ஹூ ப'ங்கா'*
*கா'த்'ரே மாஜீ பாண்டுரங்கா*
*ஹரி கதே'சீ ஸாமுக்'ரீ*
*தேஹ அவஸானாவரீ*

*மாஜே ஆயுஷ்ய ஜாலே ஊன*
*ப'ரீ மஜ ஆவ'டீ கீர்த்தன*
*துகாம்ஹணே ஹாணீ*
*யா வேக'ளீ மனா நாணீ*

"பாண்டுரங்கா! ஹரி கதையைக் கேட்பது, கீர்த்தனம் செய்வது இவையெல்லாம் இந்த உடல் இருக்கும் வரை பங்கமில்லாமலும் எனைவிட்டுப் போகாமலும் இருக்க வேண்டும். என் ஆயுள் குறுகினும் கீர்த்தனையின்பால் என் விருப்பம் குறைபடவில்லை. வேறெதுவும்
என் மனதில் புகுவதில்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'ஊடியூடி உடையாயொடு கலந்துள்ளுருகிப்
பெருகி நெக்கு ஆடிஆடி ஆனந்தம் அதுவே
யாக அருள் கலந்தே'

- *திருவாசகம்*

*18. ஸகள கு$^{3}$ணே ஸம்பன்ன*
*ஏக$^{1}$ தே$^{3}$வாசே லக்ஷண*
*வரக$^{1}$ட$^{3}$ கோ$^{1}$டே$^{2}$ காஹீ(ம்)*
*ஏக$^{1}$ ஆஹே ஏக$^{1}$ நாஹீ(ம்)*
*ஷட்கு$^{3}$ண ஐஷ்வர்ய ஸம்ப$^{1}$ன்ன*
*ஏக ப$^{4}$க$^{3}$வந்தீ$^{1}$ ஜாண*
*துகாம்ஹணே ஜே ஜே போ$^{3}$லா*
*தே$^{1}$ தே$^{1}$ ஸாஜ ஹ்யா விட்டலா*

"இறைவனின் லக்ஷணம் என்ன? அவன் எல்லா நற்குணங்களும் நிரம்பப் பெற்றவன். மற்ற எல்லாவற்றிலும் ஏதோ ஒன்று குறைவாகயிருக்கும். ஆறு ஐஸ்வர்யங்களும் பூர்ணமாக உள்ளவன் இறைவனே என்பதை அறிய வேண்டும். நாம் புகழ்வதெல்லாம் அந்த விட்டலனுக்கு பொருந்தும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

*(ஆறு ஐஸ்வரியம் - தர்மம், வீர்யம், புகழ், பொருள், தானம், வைராக்யம்)*

"நிர்க்குணப் பிரம்மமே சகுனப் பிரம்மம். அது ஈசுவரன், பகவான் என்றும் அழைக்கப்படுகிறது. ஆறு விபூதிகளையும் உடையவர் பகவான். எனினும் அவர் முக்குணத்திற்கு அப்பாற்பட்டவர்"

- *ராமகிருஷ்ணர்*

*19. க்ஷமா சஸ்த்ர ஜயா நராசியா ஹாதீ$^{1}$*
*து$^{3}$ஷ்ட$^{1}$ தயா$^{1}$ப்ரதி கா$^{1}$ய க$^{1}$ரீ*
*த்$^{1}$ருண நாஹீ தே$^{1}$தே$^{2}$ படி$^{3}$லா தா$^{3}$வாக்னீ*
*ஜாயதோ$^{1}$ விஜோனீ ஆப$^{1}$ஸயா*
*துகாம்ஹணே க்ஷமா ஸர்வாஞ்சே ஸ்வஹித$^{1}$*
*த$^{4}$ரா அக$^{2}$ண்டி$^{3}$த$^{1}$ ஸுக$^{2}$ரூப*

"எவன் கையில் 'க்ஷமை' (மன்னிக்கும் தன்மை) எனும் ஆயுதம் உள்ளதோ துஷ்டர்கள் அவனை யாது செய்ய முடியும்? புற்கள் இல்லாத இடத்தில் பெருந்தீ விழுந்தால் அது தானாகவே அணைந்துவிடுகிறது. 'க்ஷமை' எனும்

குணம் எல்லோருக்கும் நன்மையை அளிக்க வல்லதால் அதனைக் கைக் கொண்டு எல்லையில்லா சுகத்தை அடையுங்கள்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

மனத்திண்மை மனோபலம் உள்ளவர்களால்தான்
மன்னிக்க முடியும்"

*- தாகூர்*

*20. தர்ப$^1$ணாஸீ பு$^3$ஜே*
*நக$^2$டே$^1$ தோ$^1$ண்ட$^3$ ப$^1$ளவீலாஜே*
*கு$^3$ண ஜ்யாசே ஜோ அந்த$^1$ரீ*
*தோ$^1$சி த்$^1$யாஸீ பீ$^1$டா$^3$ க$^1$ரீ*
*சோரா ருசே நிசீ*
*தே$^3$கோ$^2$னியா விடே சசீ*
*துகாம்ஹணே ஜன*
*தேவா அஸே பா$^4$க்$^3$யஹீன*

"சப்பை மூக்குள்ளவன் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்து வெட்கப் பட்டு ஓடுகிறான். நம்மிடம் உள்ள குணங்கள்தான் நம்மைப் பீடிக்கின்றன. திருடனுக்கு இருட்டுதான் பிடிக்கும். நிலவைக் கண்டு ஓடுகிறான். பாக்யமில் லாதவர்களின் மனம் இவ்வாறு இறைவனிடம் போவதில்லை. (இறைவனை நெருங்காததற்கு நம்முடைய கெட்ட குணமும், மனமும்தான் காரணம்.)" என் கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பாழ்த்த விதி! எங்குற்றாய் என்றவனை ஏத்தாது
என் நெஞ்சமே! தங்கத்தான் ஆமேலும் தங்கு"

*- நம்மாழ்வார் (பெரிய திருவந்தாதி-84)*

*21. பா$^1$வலே பா$^1$வலே து$^1$ஜே ஆம்ஹா ஸர்வ*
*து$^3$ஜா நகோ$^1$ பா$^4$வ ஹோஊ தே$^3$ஊ*
*ஜேதே$^2$ தே$^1$தே$^2$ தேகே$^2$து$^1$ ஜீஞ்ச பா$^1$வுலே*
*த்ரிபு$^4$வன ஸஞ்சலே விட்டலாகா*

*பே$^4$தா பே$^4$த மதே$^1$ ப்ர$^4$மாசே ஸம்வாத$^3$*
*ஆம்ஹா நகோ வாத$^3$ த்$^1$யாம்சீ தே$^3$ஊ*
*துகாம்ஹணே அணு து$^1$ஜவிண நாஹீ*
*நபா$^4$ஹுனி பா$^1$ஹீ வாட$^3$ ஆஹே*

"உன்னிடமிருந்து எல்லாவற்றையும் (இன்பங்களையும்) பெற்றேன். மற்ற வேறொன்றிலும் மனதை ஈடுபடவிடமாட்டேன். எங்கு பார்க்கிலும் உன் பாதங்களையேக் காண்கிறேன். விட்டலனே! நீ மூவுலகிலும் நிறைந்துள்ளாய். சமய பேத விவாதங்களெல்லாம் ப்ரமையைத்தான் ஏற்படுத்துவதால் அவை எனக்குத் தேவையில்லை. நீ அணுவை விடச் சிறியவன். ஆகாயத்தைக் காட்டிலும் பெரியவன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"மிகைபட சாஸ்திர ஆராய்ச்சி பண்ணுவதில் நலனைவிடக் கேடுதான் அதிகமாக உண்டாகிறது. அதினின்று மனக்குழப்பம் வருகிறது. சாஸ்திரங்களின் ஸாரத்தை தெரிந்து கொண்டால் போதுமானது."

-ஸ்ரீ ராமகிருஷ்ணர்

22. து3தா4சே கா4க3ரீ மத்3யாசா பு3ந்த3
ப1ட3லியா சுத்த நவ்ஹே மக3
தை ஸே க2ளா(ம்) முகே2 நக1ராவே ச்ரவண
அஹங்கா1ரே மன விடா1ளலே
கா1ய க1ராவீதீ1 ப3த்தீஸ லக்ஷணே
நாக1 நாஹீ தே1ணே வாயா கே3லீ
துகாம்ஹணே அன்ன ஜிரோ நேதீ1 மாசீ
ஆபு1லியா ஜைஸீ ஸந்த ஸங்கே

"பாற்குடத்தில் ஒரு சொட்டு கள் விழ, பால்குடம் அசுத்தமாகிக் கெட்டுவிடுகிறது. மனதில் அகங்காரம் கொண்ட துஷ்டர்கள் சொல்வதைக் கேட்க வேண்டாம். முப்பத்திரண்டு லக்ஷணங்களைக் கொண்டிருந்தாலும் மூக்கு இல்லையெனில் எல்லாம் வீண்தானே? உணவுடன் ஈ உட்சென்றால் உணவு ஜீரணமாகாமல் வெளியில் வந்துவிடும். ஸத்ஸங்கத்தில் சேரவிடமாட்டார்கள் இந்த துஷ்டர்கள் என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"தயிர் தோய்த்த பாத்திரத்தில் பாலைப் போட்டு வைத்தால் அது கெட்டுப் போகும். உலகப் பற்றில் உழல்பவர்கள் உள்ளத்தில் பகவத் விஷயம் நுழைவதில்லை"

-ஸ்ரீ ராமகிருஷ்ணர்

23. போ1ட1 லாக3லே பா1டீ2ஸீ
ஹிண்ட3 வீதே1 தே3சோ தே3சீ
போ1டா1 பே4ணே ஜிக1டே3 ஜாவே

*திகடே3 போ1ட1 யேதே1 ஸவே*
*ஜபதப அனுஷ்டான*
*போ1டா1 ஸாடீ2 ஜாலீதீன*
*போ1டே1 ஸாண்டீ3யேலீ சவீ*
*நீசா பு1டே3 தே1 நாசவீ*
*போ1ட1 க1சியானே ப4ரே*
*துகாம்ஹணே ஜுரஜுருமரே*

"வயிறு முதுகை ஒட்ட (பசிப் பிணியால்) ஊர் ஊராக அலைகிறான். எங்கு சென்றாலும் வயிறும் கூடவே வருகின்றதே? வயிற்றுக்கில்லாத போது ஜபதப அனுஷ்டானங்களெல்லாம் அடங்கிவிடுகின்றன. வயிற்றுக்கு நல்ல ஆகாரம் கிடைக்க நீசர்கள் முன் ஆடவும் வேண்டியுள்ளது. வயிற்றை எப்படி நிரப்புவது என்ற கவலையிலேயே மனித தேகம் அழிகின்றது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"ஸத்கருமங்களை நிஷ்காமியமாகச் செய்வது இந்தக் கலியுகத்தில் மிகக் கடினம். இக்காலத்தில் மனிதனுடைய உயிர் அன்னத்தைச் சார்ந்திருக்கிறது"**

**- ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்**

24. *த4னவந்தா1 லா3கீ*
*ஸர்வ மான்யதா ஹே ஜ3கீ*
*மாதா பிதா ப3ந்து4 ஜன*
*ஸர்வ மானீதீ1 வசன*
*ஜவ சாலே மோடா2 த4ந்தா3*
*த1வ ப3ஹீண ம்ஹணே தா3தா3*
*ஸதா3 ச்ருங்கா3ர பூ4ஷணே*
*காந்தா1 லவே ப3ஹுமானே*
*துகாம்ஹணே த4னபா4க்ய*
*அசாஷ்வத1 ஜாண*

"இவ்வுலகில் பணம் படைத்தவனுக்குத்தான் மரியாதை கொடுக்கப்படுகிறது. தாய் தந்தையரானாலும், உறவினரானாலும் பணம் இருந்தால்தான் நம் பேச்சிற்கு மதிப்பளிக்கின்றனர். பெரிய வைபவம் நடக்கும்போது தங்கையும் அண்ணன் என்ற உறவு கொண்டு வருவாள். ஆடை அணிகள் அளித்தால் மனைவியும் வணங்கிடுவாள். ஆனால் இந்தச் செல்வமெல்லாம் நிலையற்றது என்பதை அறிய வேண்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு

- திருக்குறள்

25. *போ³லணேஞ்ச நாஹீ*
*ஆதா¹ தே³வாவீண கா¹ஹீ*
*ஏக¹ஸரே கே¹லா நேம*
*தே¹வாதி³லே க்ரோத⁴ கா¹ம*
*பா¹ஹேன தே¹ பா¹ய*
*ஜோவரீ ஹே த்ருஷ்டி தா¹ய*
*துகாம்ஹணே மனே*
*ஹே சீ ஸங்கல்ப வாஹணே*

"இப்போது இறைவனைத் தவிர பேசுவதற்கு வேறொன்றுமில்லை. காமக் ரோதங்கள் இவைகளை ஒரேயடியாக இறைவனிடமே கொடுத்துவிட்டேன். கண் பார்வை உள்ள மட்டும் இறைவன் காலடிகளையே காண்பேன் எனும் ஸங்கல்பத்தை மனதில் கொண்டுள்ளேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'மாசற்றார் மனத்துளானை
வணங்கி நாமிருப்பதல்லால்
பேசத்தான் ஆவதுண்டோ?
பேதை நெஞ்சே! நீ சொல்வாய்'

- தொண்டரடிப்பொடி ஆழ்வார்

26. *ஜிவ்ஹா ஜாணே பி¹கே¹ மது⁴ரகீ க்ஷார*
*யேர மாம்ஸ ப¹ர ஹாதா ந களே*

*தே கா¹வே நேத்ரீ போ³லாவே முகே²*
*சித்தாஸுகதுக்கே க¹ளோ யேதீ*

*ப¹ரிமளாஸி க்⁴ராண ஐ க¹தீ ச்ரவண*
*ஏகா¹சே கா¹ரண ஏகா¹ நவ்ஹே*

*ஏக தே ஹீ பி¹ன்ன டே²வில்யா க¹ளா*
*நாசவீ பு¹த¹லா ஸூத்ரதா¹ரீ*

*துகாம்ஹணே ஐஸீஜயாசீ தே1ஸத்தா*
*கா(ம்)த1யா அனந்தா விஸரலே தீ*

"இனிப்போ, துவர்ப்போ- அதை நாக்குதான் உணரும். கைகளுக்கோ ருசி ஒன்றும் தெரிவதில்லை. கண்கள் காண, வாய் பேசுகிறது. எனினும் சுக துக்கங்கள் மனதிற்குத்தான் தெரியும். வாஸனையை மூக்கு நுர, காதுகள் கேட்கின்றன. ஒன்றின் வேலை மற்றொன்றிற்கு இல்லை. ஒரே தேகத்தில் பல விதச் செயல்களை வைத்து ஸுத்ரதாரியாக உடலாகிய பொம்மையை ஆட வைக்கும் சக்தி படைத்த இறைவனை, அனந்தனை, ஏன் மறந்து விடுகிறீர்கள்?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பகவானின் மகிமைகள் எண்ணிறந்தவை. பகவானுடைய போக்கை ஜீவர்களாகிய நாம் அறிந்துகொள்ள முடியாது"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

27. *ப4க்தி ருண கே4தலே மாஜே*
*சரண க3ஹாண ஆஹேத1 து1ஜே*

*ப்ரேம வ்யாஜ தே3யீ ஹரீ*
*மாஜா ஹிசேப3 லௌக1ர க1ரீ*

*மாஜே மீ ந ஸோடீ3 த4ன*
*நித்ய கரிதோ கீர்த்தன*

*துஜே நாம ஆஹே க2த*
*ஸுகே2 க1ரீ பஞ்சாயீத*

*துகாம்ஹணே கருட3 த்வஜா*
*யாஸீ ஸாக்ஷி ஸ்ரீகுருராஜா*

"என் பக்தியை நீ கடனாகப் பெற்று அதற்கு ஈடாக உன் சரண கமலங்களை அடகு வைத்துள்ளாய். ஹே ஹரி! உன் ப்ரேமையை வட்டியாகக் கொடுத்து என் கணக்கை சீக்கிரம் முடிப்பாயாக. என்னுடைய செல்வத்தை இழக்க மாட்டேன். நாம கீர்த்தனத்தை தினமும் செய்திடுவேன். உன் நாமம் எனும் கடன் பத்திரம் என்னிடம் உள்ளது. விவகாரமின்றி சுகமாகச் செய்து முடி. ஹே கருடக் கொடியோனே! இதற்கெல்லாம் ஸாக்ஷி ஸ்ரீ குருராஜர்தான்" என்கிறார்

துகாராம் ஸ்வாமிகள்.

(இறைவனுக்கும் பக்தனுக்கும் பாலமாக குரு உள்ளதால் அவர்தான் ஸாக்ஷி எனப் பாடுகிறார் துகாராம்)

28. *ம்ருகா$^{3}$சியே அங்கீ$^{3}$ கஸ்தூரீசா வாஸ*
*அஸே ஜ்யாசா த்$^{1}$யாஸ நஸே டா$^{2}$வா*

*பா$^{4}$க்ய வந்த கே$^{4}$தீ தே$^{3}$கோ$^{2}$ளியா மோலே*
*பா$^{4}$ரவாஹீ மேலே வாஹதா$^{1}$ வோஜே*
*சந்த்ராம்ருதே$^{1}$ த்ருப்தி பா$^{1}$ரணே சகோ$^{1}$ரா*
*ப்$^{4}$ரமாராஸீ சா$^{1}$ரா ஸுக$^{3}$ந்தா$^{4}$சா*

*அதிகாரீ எதே$^{2}$ கே$^{4}$தீ$^{1}$ ஹ$^{1}$தவட$^{1}$*
*பரீக்ஷ வந்தா$^{1}$ த்ருஷ்டி ரத்ன ஜைஸே*
*துகாம்ஹணே கா$^{1}$ய அந்த$^{4}$ளியா ஹாதீ$^{1}$*
*தீ$^{1}$லே ஜைஸே மோ$^{1}$தீ வாயா ஜாய*

"கஸ்தூரி மான் தன் உடம்பில் கஸ்தூரியின் மணம் உள்ளதை அறியாது. பாக்யவந்தர்கள் விலை கொடுத்து வாங்கும் பொருட்களை சுமை தூக்கும் கூலிகள்தான் சுமப்பர். சந்திரனின் அமிர்த கிரணங்களை சகோர பக்ஷிதான் அருந்தி திருப்தியடைகின்றது. வண்டுகள் வாஸனை மலர்களை அனுபவிக்கின்றன. விலையுர்ந்த ரத்தினக் கற்களை கைதேர்ந்தவர்களால்தான் பரீக்ஷை செய்ய முடியும். குருடனின் கையில் முத்தைக் கொடுத்தால் அது வீணாகத்தான் போகும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள். (தகுதி உடையவர்களால்தான் ஆத்மானுபவம் அடைய முடியும் என்பது குறிப்பு.)

"மனித வாழ்வை கடவுள் மயமாதல் என்னும் அரிய மதிப்பை யாரோ சிலர்தான் கொடுக்கின்றனர்"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

29. *க்ஷுதார்த்தீ அன்னே துஷ்கா$^{1}$லே பீடி$^{2}$லே*
*மிஷ்டா$^{1}$ன்ன தே$^{3}$கீ$^{2}$லே தே$^{1}$ணே ஜைஸே*

*தை$^{1}$ஸே து$^{1}$ஜே பா$^{1}$யீ லாசாவலே மன*
*ஜுரே மாஜா ப்ராண பே$^{4}$டா$^{1}$வயா*

*மாஞ்சரே தே3கீலா லோணியாசா கோ3ளா*
*லாலூனியா டோ4ளா பை3ஸலேஸே*

*துகாம்ஹணே ஆதா1 ஜடீ3 கா4லூ பா1ஹே*
*பாண்டுரங்கே மாயே து1ஜே பா1யீ*

"பசியுற்றவன் எப்படி அன்னத்தை ஆசையுடன் விரும்புவானோ, பஞ்ச காலத்தில் சிறந்த விருந்தை எவ்விதம் ஒருவன் விரும்புவானோ அவ்வாறே என் மனமானது உனது காலடியை விரும்புகிறது. உன்னை தரிசிக்க என் மனம் உருகுகின்றது. வெண்ணெய் உருண்டை மீது ஆசையோடு எப்படி வைத்த கண்ணாகவே பூனை இருக்குமோ அவ்வாறே பாண்டுரங்கனின் காலடியில் கிடக்க ஆசைப்பட்டுக் கொண்டிருக்கின்றேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

**"அன்னம் ஒப்பர் அலந்து அடைந்தார்க்கெல்லாம்"**

**- அப்பர் ஸ்வாமிகள்**

30. *ஜு3ஞ்ஜா4யாச்யா கோ3ஷ்டீ1 ஜகதாஞ்சி ஸுக3 1*
*க1ரிதா ஹே துக்க தோ2ர ஆஹே*

*தை1ஸீ ஹரி பக்தி ஸுளாவரில போளீ*
*நிவடே3 தோ ப13ளீ விரளா சூர*

*பிண்ட3 போ1ஸலியா விஷயாஞ்சா பா1யீக*
*வைகுண்ட நாயக1 கை1சா தே1தே2*

*துகாம்ஹணே வ்ஹாவே தே3ஹாஸீ உதா3ர*
*ரகுமா தேவீ வர ஜோடா3வயா*

"போர் எனக் கேட்டவுடன் சுகமாக உள்ளது. ஆனால் போர் புரியும்போது ஏற்படும் துக்கமோ கஷ்டமோ மிகப் பெரிது. அவ்வாறு ஹரி பக்தி செய்வதென்பது கத்தி முனை மீது நடப்பது போன்றது (ஈட்டியின் மீது வைத்த போளியை எடுப்பது) அதில் வெற்றி கண்டவன் சூரன்தான். வயிற்றைக் கழுவுவதிலும் விஷய போகங்களை அனுபவிப்பதிலும் நாட்டம் கொண்டவர்களிடையே வைகுண்ட நாயகன் எங்கே இருக்கப் போகிறான்? ரகுமாதேவியின் மணாளனான விட்டலனிடம் ஒன்றிவிட, இத்தேகம் மாசற்றதாகட்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"முன்னமே உன சேவடிசேரா மூர்க்கனாகிக் கழிந்தன காலம் இன்னம் என்றனக்குய் வகை அருளாய்"

- சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்

31. வஸதா1 சோராபாசீ தை1ஸீ ஹோய புத்தி
தே3கதா1ஞ்சி சிந்தீ மனதா4வே
ப்ரபஞ்சாசா ச2ந்த3 டா1கு1னியா கோ3வா
த4ராவே கேசவா ஹ்ருத3யாந்த1

ஸான்டு3னியா தே3யீ ஸம்ஸாராசீ வேடீ3
கீர்த்தனாசீ கோ3டீ3 த4ராவீகா3
துகாம்ஹணே துலா ஸாங்க3தோமீ ஏக
ருக்மிணீ நாயக முகீ கா3வா

"திருடனின் சகவாஸம் இருந்தால் திருட்டு புத்தி ஏற்பட்டு அப்படியே மனதும் செயல்படும். ப்ரபஞ்சத்தின் மீது மோகம் கொண்டு அதில் சிக்காமல் இதயத்தில் கேசவனை இருத்திக் கொள்வாயாக. இந்த ஸம்ஸாரத்தின் மீதான் பற்றை உதறிவிட்டு ஹரி கீர்த்தனை மீதான ருசியைப் பற்றிக் கொள். நான் சொல்வதெல்லாம் ஒன்றே ஒன்று; ஸ்ரீருக்மணி நாயகனைப் பாடுவாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"மாதவன் என்றென்று ஓத வல்லீரேல்
தீதொன்று மடையா - ஏதம் சாராவே"

- நம்மாழ்வார்

32. பா1ப தாப1 மாஜே கு3ண தோஷ வாரீ
க்ருஷ்ணா விஷ்ணு ஹரீ நாராயண

கா1ம க்ரோத4 வைரீ கா3ஹூனீ பா3ஹேரீ
ராஹே தூ1 அந்த1ரீ பாண்டுரங்கா

க1ரிஸீல த1ரீ நவ்ஹே கா1ய ஏக
நிர்மிலே த்ரைலோக்ய ஹேளா மாத்ரே

ஸமர்த்தா2ஸீ கா1ய ஆம்ஹீ சீக1வாவே
துகாம்ஹணே யாவே பாண்டுரங்கே

“ஹே கிருஷ்ணா! ஹேவிஷ்ணு! ஹே நாராயணா! என்னுடைய பாப, தாபங்கள், குணதோஷங்கள் இவைகளையெல்லாம் களைவாயாக. காமம், க்ரோதம் முதலிய எதிரிகளை மனதினின்று வெளியில் துரத்தி, நீ என்னுள் குடிபுகுவாயாக! விளையாட்டாக இவ்வுலகையெல்லாம் நிர்மாணித்த உனக்கு எது ஒன்றுதான் இயலாதது? ஸர்வவல்லமை படைத்த உனக்கு நான் கற்றுத்தரவேண்டுமா என்ன? பாண்டுரங்கா நீ வருவாயாக” என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

'திகைத்தால் தேற்ற வேண்டாவோ?'

- திருவாசகம்

33. ஸதா3 ஸர்வ கா1ள அந்த1ரீ குடி1ல
தே1ணே க3ளாமாள கா4லூ நயே

ஜ்யாஸீ நாஹீத4ர்ம த3யா க்ஷமா சாந்தி
தேணே அங்கீ3 விபூ4தீ1 லாவூநயே

ஜ்யாஸீ நக1ளே ப4க்தீசே மஹிமான
தே1ணே ப்ரம்ம ஞான போ3லூநயே

ஜ்யாசே மன நாஹீ லாக3லே ஹாதா3ஸீ
தே1ணே ப்ரபஞ்சாஸீ டா1கூநயே

துகாம்ஹணே ஜ்யாஸீ நாஹீ ஹரிபக்தி
தே1ணே ப4க3வே ஹாதீ1 த4ரூ நயே

“எப்போதும் மனதில் கோணல் புத்தியுடையவன் தன் கழுத்தில் ஜப மாலைகளை அணிய வேண்டாம். எவனிடம் தர்மம், தயை, சாந்தி, க்ஷமை இவையெல்லாம் குடி கொள்ளவில்லையோ அவன் திரு நீற்றை பூசிக் கொள்ள வேண்டாம். பக்தியின் பெருமையை அறியாதவன் ப்ரம்ம ஞானத்தைப் பற்றிப் பேசவேண்டாம். மனதை தன் வசம் கொண்டுவர இயலாதவன் உலகை துறக்க வேண்டாம். ஹரிபக்தியில்லாதவன் கையில் காவி வஸ்திரத்தைத் தொடவேண்டாம்” என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'குருஸ்தானம் வகிப்பதை சிலர் தொழிலாக வைத்திருக்கின்றனர். அப்படிச் செய்வது சரியன்று. வெளிவேஷத்திற்கு காவியுடையணிவதைவிட நேராக வெள்ளை வேஷ்டி அணிவது மேலானது.'

- ஸ்ரீராமகிருஷ்ணர்

34. ஜ3ரீ ஜாலா பா4க்யவந்த
த1ரிகா1 பே4டே1ல ப4க3வந்த

உஞ்ச வாட4லா ஏரண்ட3
த1ரிகா ஹோயில இக்ஷு த3ண்ட4

ஜரீ க3ர்த3ப4 வேகீ3 தா4வே
த1ரிகா அஷ்வ மோல பா1வே

துகாம்ஹணே தோ1சி தோ2ர
ஜ்யாசே மு2கீ ரகுவீர

"பாக்யவான், பணம் படைத்தவன் என்பதால் மட்டும் இறைவன் தோன்றிடு வானா என்ன? ஆமணக்குச் செடி உயரமாக வளர்ந்தாலும் கரும்பாகிவிடமு டியுமா? வேகமாக ஓடும் கழுதைக்கு குதிரை விலை கிடைக்குமா? யார் நாவில் ரகுவீரன் அமர்ந்துள்ளானோ அவனே பெரியவன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'ஞானம், பக்தி, விவேகம், வைராக்கியம் போன்ற தெய்வ சம்பத்துக்களையே பக வான் மக்களிடம் எதிர்பார்க்கிறார்.'

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

35. அந்த1ரீ நிர்மள வாசே1சா1 ரஸாள
த்1யாசே க3ளா மாளா அஸோ நஸோ

ஆத்மா அனுப4வீ சோகா2ளீல்யா வாடா2
த்யாசே மாதா2(ம்) ஜடா அஸோ நஸோ

பரத்3ரவ்யா அந்த4 நிந்தே3 ஸீஜோ மூகா1
தோ1 சீ ஸந்த1 தே3கா2 துகாம்ஹணே

"மனத்துக் கண் மாசில்லாமல், மிருதுவான வாக்கைக் கொண்டவனுக்குக் கழுத்தில் ருத்ராக்ஷ மாலை, துளஸீ மணி மாலை முதலியவை தேவையில்லாத் வைதான். நன்றாகக் கற்றுணர்ந்து ஆத்மானுபவம் அடைந்தவன், தலையில்

ஜடாமுடி வளர்க்க வேண்டியதில்லையே? பிறர் பொருளின் மீது குருடாயி ருப்பவன் (ஆசை கொள்ளாதவன்), நிந்தனை செய்யப்படினும் ஊமையாக இருப்பவன் (பொறுமையைக் கடைப்பிடிப்பவன்) தான்- ஸாது- ஸந்த என்றறி யவும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

'மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்ததொழிந்து விடின்

- திருக்குறள்

36. *ஆ$^{4}$தீ ஹோதா வாக்$^{4}$யா*
*தை$^{3}$வ யோகே$^{3}$ ஜாலா பா$^{1}$க்$^{3}$யா*

*த்யாசா யேள கோ$^{1}$ட$^{1}$ ராஹீனா*
*மூள ஸ்வபா$^{4}$வ ஜாயீனா*

*ஆ$^{4}$தீ ஹோதா$^{1}$ க்ராம ஜோஷீ*
*ராஜ்ய ப$^{1}$த$^{3}$ ஆலே த்யாசீ*

*தயாசே ப$^{1}$ஞ்சாங்க ராஹீனா*
*மூள ஸ்வபா$^{4}$வ ஜாயீனா*

*ஆதீஹோதி$^{1}$ தா$^{3}$ஸீ பட்ட$^{2}$ராணி கே$^{1}$லே தி$^{1}$ஸீ*
*தி$^{1}$சே ஹிண்ட$^{3}$ணே ராஹீனா*
*மூளஸ்வபா$^{4}$வ ஜாயீனா,*

*ஆதீ ஹோதா$^{1}$ ஸந்த ஸங்க*
*துகா ஜாலா பாண்டுரங்க*

*த்யாசே ப$^{4}$ஜன ராஹீனா -*
*மூள ஸ்வபா$^{4}$வ ஜாயீனா*

"(ஜெஜூரி கோவிலில்) 'வாக்யா' என்று ஆடிக் கொண்டிருப்பவன், 'ஏள் கோட், ஏள் கோட் என்று (அங்குள்ள கண்டோபா மல்லாரியை) சொல்லிக் கொண்டிருந்தவன், மறுபிறவியில் பெரிய பாக்கியவானாகிவிட்டாலும் அவ னுக்கு (ஏள்கோட் மஹாராஜ்) பழைய ஞாபகம் (வாஸனை) போகாது. கிராம ஜோஸ்யனாக இருந்தவன் அரச பதவிக்கு வந்தாலும் பஞ்சாங்கத்தைப் புரட்டு வது நிற்காது. அது அவனுடைய மூல ஸ்வபாவம். தாசியாக இருந்தவள் பட்

டத்து அரசியாக உயர்ந்தாலும் அவளுடைய போக்குவரத்து நிற்காது; அவள் மூல ஸ்வபாவம் மாறாது. ஸ்தஸங்கத்திலேயே எப்போதும் இருந்த துகாராம் பாண்டுரங்க பக்தனானான். அவனுடைய விட்டல பஜனை நிற்காது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.
(முன்பிறவியின் வாஸனை தொடரும் என்பது சுட்டிக் காட்டப்படுகிறது.)

"ஸாது ஒருவருடைய சுரக்குடுக்கையில் செய்யப்பட்ட கமண்டலம் தீர்த்த யாத்திரை போகிறது. ஆயினும் அதன் கசப்பு அதைவிட்டு அகலுவதில்லை"

- ராமகிருஷ்ணர்

"பூர்வ ஜன்மத்தில் வண்ணானாக இருந்த ஒருவன் இந்த ஜன்மத்தில் ராஜகுமாரனாகப் பிறந்தான். மற்றவர்களுடன் விளையாடும்போது தான் கல்பாறை போன்று குப்புறப்படுத்துகொள்வதாகவும் உஸ் உஸ் என்று சொல்லிக் கொண்டு துணிகளை துவைப்பதாகவும் ஒரு விளையாட்டைச் சொல்லிக் கொடுத்தானாம்"

- ஸ்ரீராமகிருஷ்ணர்

37. *சாது[1]ர்யாசே யோகே[3] கவித்வ க[1]ரிதீ[1]*
*ப்ரஸா[3]திக ரங்க[3] ஆணிதா[1] நயே*

*ஸந்யாஸாசே ஸோங்க[3] ஸம்பாதி[1]லே ஸாங்க*
*வைராக்யாசே அங்க[3] ஆணிதா(ம்)நயே*

*சந்திர சூரிய சித்ரே லிஹிதா[1] தி[1] பிந்தீ[1]*
*ப்ரகா[1]சாசே அங்க[1] லிஹிதா நயே*

*சிபா[1]யாசே ஸோங்க[3] ஆணிதா[1] யேயீல ஸாங்க[3]*
*சூரத்வாசே அங்க[3] ஆணிதா[1](ம்) நயே*
*துகாம்ஹணே கா[13]வுன நாகுன க[1]ரிதீ[1]லஸீமா*
*பாண்டுரங்கீ ப்ரேம ஆணிதா[1] நயே*

"திறமை கொண்டு கவிதை புனைகிறார்கள். ஆனால் அது அருட்கவியாக் விளங்குமா? துறவியின் வேடத்தை மட்டும் ஏற்றால் வைராக்யத்தைக் கையாள முடியுமா? சுவற்றில் சூரிய சந்திர சித்திரங்கள் வரைந்தால் அவைகளின் ஒளியை எழுதிக் காட்ட முடியுமா? சிப்பாய் போல வேடமேற்றால் வீரத்ரத்தைச் செய்ய இயலுமா? (ப்ரேமிக பாவம் இன்றி) இறைவனின் பாடல்களை எல்லையற்று ஆடிப்பாடினாலும் பாண்டுரங்கனிடம் கொள்ளவேண்டிய உண்மையான ப்ரேமையைக் கொண்டுவரமுடியுமா?" என்கிறார் துகாராம்

ஸ்வாமிகள்.

(வெளிவேஷம் உதவாது என்பதைக் சுட்டிக் காட்டுகிறார் துகாராம் ஸ்வாமிகள்)

**"இறைவனுடைய திருநாமத்தை ஒதுதலுடன் உள்ளுணர்வும் பக்தி விசுவாசமும் ததும்பிக் கொண்டிருக்க வேண்டும். வெறும் சொல்லால் ஒன்றும் ஆகிவிடாது"**

**-ஸ்ரீ ராமகிருஷ்ணர்**

*38. ஏதே$^{2}$ கோ$^{1}$ணாசே கா$^{1}$ய கேலே*
*ஜ்யாசே தே$^{1}$ணே அநஹித கே$^{1}$லே*

*கங்கா ஆலீ ஆளசாவரீ*
*ஆளசீ தே$^{3}$கு$^{2}$னி ப$^{1}$ளே து$^{3}$ரீ*

*கா$^{3}$வா(ம்)கா$^{2}$லீல ஒஹள*
*ராகே$^{3}$ க$^{3}$ங்கே$^{3}$ஸிந மிளே*

*துகாம்ஹணே ஹோவூனி தாஸ*
*கு$^{3}$ருஸீ ந ப$^{4}$ஜதீ சிஷ்ய*

"யாராவது இன்னலை விளைவித்தார்களா என்ன? நமக்கு நாமேதானே ஹிதமல்லாததைச் செய்கின்றோம்? கங்கை தானே வரும்போது, கழிவு நீரோடை விலகி ஓடிவிட்டால் யாருக்கு நஷ்டம்? ஊரிலிருந்து வெளியே ஓடும் நீர் கோபங்கொண்டு கங்கையுடன் சேராமல் போனால் கங்கைக்கா நஷ்டம்? குருவாக ஏற்றபின் அவரைப் பூஜிக்காமல் இருந்தால் அவருக்கா நஷ்டம்?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

(நமக்கு நாமே ஹிதத்தைத் தேடிக் கொள்ளாமல் இருப்பதை சுட்டுகிறார்).

**"மன்றத்து புன்னைபோல் மரம்படு துயரம் எய்தி ஒன்றினால் உணரமாட்டேன், உன்னையுள் வைக்கமாட்டேன்"**

**- அப்பர் ஸ்வாமிகள்**

*39. மாதா$^{1}$ கா$^{1}$பீ$^{3}$ க$^{3}$ளா தே$^{1}$தே$^{2}$ கோ$^{1}$ண ரா$^{2}$கீ பா$^{3}$ளா*
*ஹே கா$^{1}$ நேணா நாராயணா - மஜ சாளவீதா$^{1}$ தீ$^{1}$னா*

*நாக$^{3}$வீதா$^{4}$வணே தே$^{1}$தே$^{2}$ ஸாஹ்ய வஹாவே கோ$^{1}$ணே*
*ராஜா ஸர்வ ஹரீ தே$^{1}$தே$^{2}$ து$^{3}$ஜா கோ$^{1}$ண வாரீ*

*துஜ்யா கேல்யாவீண நவ்ஹே ஸ்தீர வச மன*
*துகாம்ஹணே ஹரீ - ஸுத்ர தும்ஹா ஹா[1]தீ தோ[3]ரீ*

"பெற்ற தாயே குழந்தையின் கழுத்தை அறுத்தால் அதனை யார் காப்பாற்றுவர்? அடைக்கலம் கொடுத்தவன் ஏமாற்றினால் யார் உதவிக்கு வருவர்? அர்சனே எல்லாவற்றையும் பறித்துக் கொண்டால் மற்ற எவர் துணை செய்வார்? ஹே நாராயணா! இதெல்லாம் உனக்குத் தெரியாததா? தீனனான என்னை ஏன் கஷ்டப்படுத்துகிறாய்? மனது என் வசமாக நீதான் ஏதாவது செய்யவேண்டும். அதன் ஸுத்ரக் கயிறு உன்னிடமே உள்ளது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"நாவாய் உறைகின்ற என் நாரண நம்பீ 'ஆவா அடியான் இவன்' என்றருளாயே"
- நம்மாழ்வார்

40. *வர்ணாவீதே[1] தோ[2]ரீ ஏகா விட்டலாசீ*
*கீர்த்தி மானவாசீ போ[3]லோ நயே*

*உத[3]ண்ட[3]சீ ஜாலே ஜன்மோனியா மேலே*
*ஹோவோனியா கே[3]லே ராவரங்க[1]*

*த்யாசே நாம கோ[1]ணீ ந கே[4] சராசரீ*
*ஸாஹீ வேத சாரீ வாணிதா[1] தீ[1]*

*அக்ஷய அட[4]ள சளேனா வளேனா*
*த[1]யா நாராயணா த்[4]யாத[1] ஜாவே*

*துகாம்ஹணே தும்ஹீவிட்டல சித்தீ[1] த்யாதா[1]*
*ஜன்ம மரண வ்யதா[2] தூ[3]ர ஹோதீ[1]*

"மனிதனின் கீர்த்தி பற்றி வர்ணிக்காமல் விட்டலனின் பெருமையைத்தான் வர்ணிக்க வேண்டும். எத்தனையோ ஜீவன்கள் பிறப்பெடுத்து அரசனும் ஆண்டியுமாக மரித்துவிட்டன. அந்த ஜீவன்களைப்பற்றி யாரும் பேசுவது கிடையாது. நான்மறைகளும் ஆறங்கமும் புகழ்கின்ற, குறைவிலா சாச்வத பதத்திலிருக்கும் ஸ்ரீமந் நாராயணனை நினையுங்கள். விட்டலனை மனதினில் தியானிக்க பிறப்பிறப்பின் துன்பம் விலகிவிடும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால் தன்னாகவே கொண்டு சன்

மம் செய்யாமையும் கொள்ளுமே"

- நம்மாழ்வார்

41. ராஜா சா[1]லே தே[1]தே[2] வைப[4]வ ஸாங்கா[3]தே[1]
ஹே கா[1]ய லாக[3]தே[1] ஸாங்கா[3]வே த்[1]யா

கோ[1]ணீ கோ[1]ணா எதே[2] நமனீ ஜீ பு[1]கா
க்ருபே[1] வீண ஏகா தே[3]வாசியா

ச்ருங்கா[3]ரிலே நாஹீ த[1]கோ[3] யேத[1] வரீ
உமடே[1] லௌக[4]ரீ ஜைஸே தைஸே

துகாம்ஹணே க[4]ரீ வஸே நாராயண
கருபே[1]சீ தே[1] கு[2]ண திஸோ யேதே[1]

"மன்னன் செல்லும் இடமெல்லாம் வைபவம் கூடுகிறது. (அவன் சென்றவு டன் அவையெல்லாம் மறைந்துவிடும்). மேல் அலங்காரத்தால் சோபிப்பது சிறிது நேரம்தான் தங்கும். (பழையபடி தன் நிலைக்கு வந்துவிடும்). இறைவ னைத் தவிர வேறு எவரும் ஒன்றையும் எதிர்ப்பார்க்காமல் மதிப்பதில்லை. வீட்டில் இறைவன் குடி கொண்டால் அவனுடைய க்ருபை எனும் குணம் அங்கு தெரிய வரும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(எதையும் எதிர்பாராது அவன் க்ருபை வெளிப்படும்போது இறைவன் இருக்கின்றான் எனும் உணர்வு ஏற்படும்)

'பக்தன் ஒருவனுடைய உள்ளத்தில் தெய்வீக இயல்புகள் தோன்ற ஆரம்பிக்கும் பொழுது அவன் உள்ளத்தில் தெய்வம் விரைவில் எழுந்தருளுவார் என்று யூகிக்க லாம்.'

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

42. ஜேவீ நவஜ்வரே தா[1]ப[1]லே சரீர
லாகே[3] த[1]யா க்ஷீர விஷ து[1]ல்ய

தே[1]வீ பரமார்த்த[2] ஜீஹீ து[3]ராவிலா
த[1]யாலாகீ[2] ஜாலா ஸன்னிபா[1]த

கா[1]மீண ஜ்யாச்யா ஜாஹலீ நேத்ராஸீ
தேகீ[2] தோ[1] சந்த்ராஸீ பீ[1]த[1] வர்ண

துகாம்ஹணே மத்$^{4}$யபா$^{1}$ணாசீ ஆவடீ$^{3}$
ந ருசே த்யா கோ$^{3}$டீ$^{3}$ நவநீதா$^{1}$சீ

"உடம்பு தாப ஜ்வரத்திலிருக்கும்போது பால்கூட விஷம் போலிருக்கும். மஞ்சள் காமாலை நோய் உள்ளவனுக்கு நிலவும் மஞ்சளாகத்தான் தெரியும். மதுவில் ருசி கொண்டவனுக்கு வெண்ணெய் ருசிக்காது. அவ்விதம் இறை உணர்வு அற்றவர்களுக்கு எல்லா நலன் தருபவைகளிலும் ருசி ஏற்படாது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"மலங்களைந்தார் சுழல்வன் தயிரிற்பொரு மத்துறவே"

– திருவாசகம்

43. அவகா$^{4}$ தோ$^{1}$ சகு$^{1}$ன
ஹ்ருதயீ தே$^{3}$வாசே சரண

எதே$^{2}$ நஸதா$^{1}$ வியோக$^{3}$
லாபா$^{4}$ உணே கா$^{1}$ய மக$^{3}$

ஸங்க$^{3}$ ஹரீச்யா நாமாசா
சுசிர்பூ$^{4}$த ஸதா$^{3}$ வாசா

துகாம்ஹணே ஹரிச்யா தாஸா
சுப$^{4}$காள அவக்$^{4}$யா தி$^{3}$சா

"இறைவனை இதய பூர்வமாகச் சரணடைந்தவர்களுக்கு சகுனம், அபசகுனம் என்பது இல்லை. அவன் நினைவைப் பிரியாமலிருப்பவனுடைய சுகத்திற்கு ஏது குறை? ஹரி நாம ஸ்மரணையில் இருப்பவனின் வாக்கு எப்போதும் சுத்தமானதுதான். ஹரிதாஸர்கள் எங்கு சென்றாலும் அவர்களுக்கு எல்லாக் காலமும் நல்லதாகவே அமையும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"நாம மாருதீசே க்யாவே புடே பாவுல டாகாவே
அவகா முஹுர்த சகுன – ஹ்ருதயீ மாருதீஞ்சே த்யான"

–ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸ ஸ்வாமி

44. ப$^{1}$ரிமள ம்ஹணு சோ$^{1}$ஜூ நயே பூ$^{2}$ல
கா$^{2}$ஜூ நயே மூல ஆவட$^{3}$தே$^{1}$

மோதி[1]யாசே பா[1]ணீசாகூ[2] நயே ஸ்வாத[3]
யந்த்ர பே[4]துனி நாத[3] பா[1]ஹூ நயே
கா்மப[2]ள ம்ஹணுனீஇச்சூ நயே காம
துகாம்ஹணே வர்ம தா[3]வூ லோகா

"வாஸனை வீசும் மலரைக் கசக்கி முகரலாமா? கூடாது. விரை நெல் நன்றாக உள்ளது என்று சாப்பிட்டுவிடலாமா? முத்துச் சிப்பியை உடைத்து அதனிலிருக்கும் நீரை பருகலாமா? (பின் முத்து எப்படி உண்டாகும்) இசைக் கருவியை உடைத்து நாதத்தை கேட்க முடியுமா? ஆகவே கருமங்கள் என்று போகத்திற்கு ஆசைப்படக் கூடாது எனும் இந்த சூட்சும ரகஸியத்தைச் சொல்கிறேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(கருமங்கள் செய்யச் செய்ய வினைகளின் சுமைதான் ஏறிடும்)

"வழக்கில் வெற்றி பெறுவதற்கும் பொருளை அபரிமிதமாகப் பெறுவதற்கும் ஆத்ம ஸாதனங்கள் செய்வது ஒருவனிடத்தில் உள்ள அல்ப புத்தியை எடுத்துக் காட்டுகிறது"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

45. த[4]ன்ய தேசி ப்ராணீ க்ஷமா ஜ்யாசே அங்[3]கீ
ந ப[4]ங்கே ப்ரஸங் கீ[3] தை[4]ர்ய ப[3]ள

ந ம்ஹணே கோ[1]ணாஸீ உத்தம வாயிட[1]
மஹத்வ வரிஷ்ட நஸே ஜேதே[12]

அந்த[1] ரீ ஸபா[3]ஹ்ய ஸாரிகே[2] நிர்மள
ஹ்ருதய கோமள க[3]ங்கா[3]ரூப

துகாம்ஹணே கா[1]யா குரவண்டீ[3] த[1]யா
டே[2]வீன மீ பாயா மஸ்த[1]க[1] ஹே

"யாரிடம் மன்னிக்கும் தன்மை குடிகொண்டுள்ளதோ, ஸமயம் வரும்போது தைரியத்தையும் பலத்தையும் இழக்காமலிருக்கிறார்களோ அவர்கள்தான் தன்யர்கள். யாரையும் உத்தமன் என்றோ அதமன் என்றோ அவர்கள் சொல்வதில்லை. உயர்ந்தவன், சிறந்தவன் என்கிற எண்ணமும் அவர்களிடம் இருப்பதில்லை. உள்ளும் புறமும் தூய்மையாகவும். இளகிய இதயத்தையும் கொண்ட அவர்களை ஆரத்தி எடுத்து அவர்களின் காலடியில் தலை வைத்து வணங்கிடு

வேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

46. ஆணீக து[3]ஸரே மஜநாஹீ ஆதா[1]
நேமிலேயா சித்தா பா[1]ஸுனியா

பாண்டுரங்க த்[4]யானீ பாண்டுரங்க மனீ
ஜாக்[3]ருதீ ஸ்வப்னீ பாண்டுரங்க

ப[1]டி[3]லே வளண இந்திரியா ஸகளா
பா[4]வதோ நிராளா நாஹீ து[3]ஜா

துகாம்ஹனே நேத்ரீ கே[3]லீ ஔக[2]ண
த[1]ட[1]ஸ்த்த ஹே த்யான விடேவரீ

"இப்போது என் சித்தத்தின் பால் இரண்டாவதாக ஒன்று இல்லை. என் மனதில் பாண்டுரங்கன்தான் உள்ளான். த்யானத்திலும், விழிப்பிலும், தூக்கத்திலும் கனவிலும் அவன் தோற்றம்தான். இந்திரியங்கள் எதிலும் கவனம் செலுத்துவதில்லை. பாவனை மட்டும் என்ன? வேறொன்றிலும் இல்லை. கண்கள் வேறு எதையும் கண்டு கொள்வதில்லை. விட்டலன் நிற்கும் அந்தச் செங்கல் பீடத்தின் மீதே த்யானம் அசையாமல் உள்ளது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'வந்திப்பார் வணங்கி நின்று வாழ்த்துவார் வாயின் உள்ளார் சிந்திப்பார் சிந்தையுள் ளார்.'

– அப்பர் ஸ்வாமிகள்

47. ஹரி நாமவேலி பா[1]வலீ விஸ்தாரா
பளீ புஷ்பீ பா[4]ர வோல்ஹாவலீ

தே[1]தே[2] மாஜ்யா மன ஹோயீ ப[1]க்ஷி ராஜ
ஸாதா[4]வயா கா[1]ஜ த்ருப்தீசே யா

முளீஞ்சியா பீ[1]ஜே தா[3]க[2]வீலீ கோ[3]டி[3]
லவக[1]ரசி ஜோடி ஜாலியாசி

துகாம்ஹனே க்ஷணக்ஷணா ஜாதோ[1] காள
கோ[3]டி[3] தே[1] ரஸாள அந்த[1]ரேல

"ஹரி நாமம்" எனும் கொடியானது விஸ்தாரமாகப் பரவியது. பூக்களும் பழங்களுமாக அது தாழ்ந்து வருகிறது. என் மனம் கருடனாகி அவைகளை ஆசை தீர அனுபவிக்கும் முயற்சியைக் கொள்ளும். மூலமான(விதையான) ஹரி நாமம் ருசியைக் காட்டியது. சீக்கிரமே நாம ரஸத்தை அனுபவிக்க வேண்டும். இல்லையெனில் அது கிட்டாமல் போய்விடும். க்ஷணத்திற்கு க்ஷணம் காலம் வீணாகச் செல்லுமே" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"உலகெங்குமுள்ள ரஸம் அல்லது இனிமை எந்தப் பகவானிடத்திலிருந்து ஓயாது வந்து கொண்டிருக்கிறதோ அந்தப் பகவானை சீக்கிரமே அடைய வேண்டும்"**

**- ஸ்ரீ ராமகிருஷ்ணர்**

48. *க$^{1}$தா$^{2}$ துக்க ஹரீ க$^{1}$தா$^{2}$ முக்த$^{1}$ க$^{1}$ரீ*
*க$^{1}$தா$^{2}$ யாசீ வரீ ராகோ$^{4}$பா$^{3}$சீ*

*க$^{1}$தா$^{2}$ பாப நாசீ உத்த$^{4}$ர$^{1}$தீ தோ$^{3}$ஷி$^{1}$*
*ஸமா$^{3}$தி கதே$^{2}$ஸீ மூட$^{4}$ ஜனா*

*கதா$^{2}$ ஜப த்யான கதா$^{2}$ அனுஷ்டான*
*அம்ருத தே$^{1}$ பா$^{1}$ன ஹரிகதா$^{2}$*

*துகாம்ஹணே கதா$^{2}$ ஹரீ ஸர்வ தா$^{1}$ப*
*கதா$^{2}$க$^{1}$ரீ கா$^{1}$ம்ப க$^{1}$லிகாளா*

"ஸ்ரீ இராமனின் கதை துக்கத்தை அகற்றும்; முக்தியை அளிக்கும்; பாவத்தை நசிக்கும். தோஷங்களிலிருந்து மீளச் செய்யும்... ஏன்! ஸமாதி நிலைக்கே இட்டுச் செல்லும். ஹரிகதையை கேட்பதினாலேயே ஜப. தியானம் முதலிய எல்லா அனுஷ்டானங்களும் செய்ததாகிவிடுகின்றன. அது (ஹரி கதை) அமிர்தம் அருந்துவது போலாவது. எல்லா தாபங்களையும் போக்க வல்ல ஹரிகதையினால் கலிகாலம் நடுக்கமுறும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

49. *நாராயணீ ஜேணே க$^{4}$டே$^{3}$ அந்த$^{1}$ராய*
*ஹோகா$^{1}$ மாய பா$^{3}$ப$^{1}$ த்யஜா வீதீ*

*யேரா ப்ரியா பூ$^{1}$த்ரா கோ$^{1}$ண கரீ லேகா$^{2}$*
*கரீதீ தே$^{1}$ துக்கா பா$^{1}$த்ர சத்ரு*

ப்ரஹ்லாதே ஜனக விபீஷணே ப்[3]ந்தூ[4]
ஆணி மாதா[1] நிந்தூ[3] ப்[4]ரதே கே[1]லீ

துகா ம்ஹணே ஸர்வ தர்ம ஹரீ பா[1]ய
ஆணீக உபாய துக்க மூல

"நாராயண பக்தி செய்வதில் இடையூறு செய்பவர் யாராயினும், தாய்தந்தையரானாலும், அவர்களைத் தியாகம் செய்ய வேண்டியதுதான். மனைவி மக்களைப் பற்றிக் கேட்பானேன்? இவர்கள் சத்ருக்களாயிருந்து துக்கத்தையே கொடுப்பவர்கள் பிரஹ்லாதன் தன் தந்தையிடம் பிரியம் காட்டவில்லை. வீபீஷணன் தன சகோதரனாகிய இராவணனைத் துறந்தான். பரதன், தன்தாயை நிந்தித்து வெளியேறினான். இறைவனைத் தொழுவதில்தான் எல்லாத் தர்மங்களும் அடங்கும். மற்றவையெல்லாம் துக்கத்திற்கு மூல காரணமானவை தான்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"ஸாதகன் ஒருவனுடைய ஆத்ம சாதனங்களுக்கு இடைஞ்சலாயிருக்கும் உற்றார் உறவினர்களைப் புறக்கணிப்பதில் குற்றம் ஒன்றுமில்லை"**

*- ராமகிருஷ்ண பரமஹம்ஸர்*

50. ஸந்தீ பீ[3]ஜ நேதோ தோ[2]டே[3]
மோடே[2] ஆணிதா[1]தீ[1] கோ[3]டே[3]

ஏகயா நாமே ஹரி ஜோடே[3]
பீ[1]டே[1] ஜன்மாசே ஸாங்கடே[3]

மாளே மோளே ஜன
ஸர்வதரதீ கீர்த்தனே

துகாம்ஹணே தே[1]ணே முடே[4]
நாம ஸ்மராவே ஸாவடே[3]

"ஸாதுக்கள் ஒழுக்கம், நேர்மை இவற்றை ஆதாரமாகக் கொண்டு பெரிய தான இன்பத்தை அடைகிறார்கள். நாம ஸ்மரணையால் ஸ்ரீ ஹரியை அடைந்து பிறவித் துன்பங்களிலிருந்து மீளுகின்றனர். ஏழை எளிய மக்களும் நாம ஸங்கீர்த்தனத்தால் கரையேறுகின்றனர். ஆகையால் மூடஜனங்களே! எல்லோருமாகச் சேர்ந்து நாம ஸ்மரணை செய்திடுவீர்" என்கிறார் துகாராம்

ஸ்வாமிகள்.

"இறைவனுடைய திருநாமத்தை ஓதச் செய்து ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் இழிகுலத்தவர்களையும் மேன்மக்களாக்கிவிட்டார்"

-ஸ்ரீ ராமகிருஷ்ணர்

51. *அக்னீ மாஜீ கே$^{3}$லே*
*அக்னி ஹோஊன தே$^{1}$ஞ்ச டே$^{2}$லே*

*கா$^{1}$ய உரலே த$^{1}$யாப$^{1}$ண மா$^{3}$கீலதே$^{1}$ நாம கு$^{3}$ண*
*லோஹலாகே$^{3}$ ப$^{1}$ரிஸா அங்கீ$^{3}$*

*தோ$^{1}$ஹீ பூஷண ஜாலா ஜ$^{3}$கீ*
*ஸரிதா$^{1}$ ஓஹளா ஓகா$^{4}$*

*கங்கே மிளோனி ஜாஹல்யா கங்கா*
*சந்தனாச்யா வாஸே*
*த$^{1}$ரு சந்தன ஜாலே ஸ்ப$^{1}$ர்சே*

*துகா ஜட$^{3}$லா ஸந்தா பா$^{1}$யீ*
*து$^{3}$ஜேபணா டா$^{2}$வ நாஹீ*

"அக்னியில் போடுவதெல்லாம் நெருப்போடு நெருப்பாகிவிடுகிறது. அவைகளின் அடையாளங்கள் ஒன்றும் மிஞ்சுவதில்லை. பரிசவேதிக் கல்லால் தொடப்பட்ட இரும்பு தங்கமாகி ஆபரணமாகிறது. சிறுசிறு ஓடைகள் கங்கையுடன் கலந்து கங்கை ஜலமாகிவிடுகிறது. சந்தனக் காட்டில் உள்ள மரங்களும் ஸ்பரிசத்தால் சந்தன வாஸனை பெருகின்றன. ஸாதுக்களின் திருவடிகளில் தங்களை அப்பணித்துக் கொண்டவர்களும் அவ்வாறே ஆகிவிட, வேற்றுமைக்கு அங்கு இடமில்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

'ஈசுவர பக்தியும், சத்புருஷர்களுடைய சகவாஸமும் ஒருவனுக்கு வந்துவிட்டால் போதுமானது. மேற்கொண்டு அடைவதற்கு என்ன இருக்கிறது?'

-ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

52. *நர தே$^{3}$ஹா யாவே ஹரிதாஸ வ்ஹாவே*
*தே$^{1}$ணே சு$^{1}$கவாவே கர்ப்ப வாஸா*
*நாஹீ த$^{1}$ரீ வாயா சிணவிலீ மாய*

*நரகா¹ஸீ ஜாய ஜன்மோ ஜன்மீ*

*தீர்த்த வ்ரத தா³ன தே³வாசே பூ¹ஜன*
*ஐஸே ஹே ஸாத⁴ன ஸாத⁴காஞ்சே*
*துகாம்ஹணே மு²கீ நித்ய ம்ஹணே ஹரீ*
*த¹யா ஸுகா² ஸரீ நாஹீ பா¹ர*

"மனிதப்பிறவியெடுத்து ஹரிதாஸர்களாகி (இறைவனடியார்களாகி) இப்பிறவியிலிருந்து தப்ப வேண்டும். இல்லையென்றால் பிறவி கொடுத்த தாய் பட்ட சிரமம் வீணானதே. மேலும் பிறவிகள் தோறும் நரகத்தின் வாயில் புக வேண்டி வரும். தீர்த்த யாத்திரை, விரதங்கள், தானங்கள் தேவ பூஜை இவையெல்லாம் பிரயாசை மிகுந்த செயல்களாகும். நிதமும் 'ஹரி, ஹரி' என்று நாவில் சொல்லிக் கொண்டிருப்பதின் இன்பத்திற்கு எல்லையே இல்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"துற்றியேழுலகுண்ட தூமணி வண்ணன், தன்னைத் தொழாதவர் பெற்ற தாயர் வயிற்றினைப் பெருநோய் செய்வான் பிறந்தார்களே"

- பெரியாழ்வார்

53. *தை¹ஸே நவ்ஹோ ஆம்ஹீ விடோபாசே தாஸ*
*யாவே ஆணீகா¹ஸ கா¹கு¹ளதீ¹*

*ஸ்வாமிசீயே ஸத்தே¹ டே²ங்கணே ஸகள*
*ஆலே கலிகாள ஹா¹தாகா²ளீ*

*அங்¹கிதா¹சா அஸே அபி¹மான தே³வா*
*ஸமர்பூனீ டே²வீ அஸே பா¹யீ*

*துகாம்ஹணே ஆம்ஹா இச்சேசே போ³ளணே*
*கோ³ட³ நாராயணே பூ¹ரவாவே*

"வேறு எதற்கும் ஏங்கிக் கொண்டு புலம்ப மாட்டோம், விட்டலனின் தாஸர்களாகிய நாம். இறைவனின் மகாசக்திக்கு முன் எல்லாமே குறுகிவிடும். கலிகாலமும் அடங்கிவிடும். உன்னுடைய தாஸனாகிய நான் என் அபிமானத்தை உந்தன் காலடியில் அர்ப்பணித்துவிடுவேன். இப்படி நான் உன்னிடம் ஆசையுடன் வேண்டுவதை நீ முழுவதுமாக நிறைவேற்றவேண்டும்" என்கிறார் துகா

ராம் ஸ்வாமிகள்.

"இறைவன் எம்பெருமான் என்றெப்போதும் ஏத்தி ஏத்தி நின் அஞ்சலி செய்துள் அறைகொள் சேவடிக்கன்போடும் அடைந்தேன்"

- சுந்தரமூர்த்தி நாயனார்

54. லேங்க$^{1}$ரா லேவவீ மாதா அலங்கார
நாஹீ அந்த$^{1}$ பா$^{1}$ர ஆவடீ$^{3}$ஸீ

க்ருபேசே போ$^{1}$ஸணே துமசே மீ தீன
தும்ஹீ ஸந்த ஜன மாய பாப

ஆருஷ உ$^{1}$த்த$^{1}$ரீ ஸந்தோஷே மாவுலீ
கவளூனீ கா$^{4}$லீ ஹ்ருதயா ஆந்த

போடா$^{1}$ ஆலே த்யாசே நபா$^{1}$ஹே குண தோஷ
க$^{1}$ல்யாணாசீ இச்சீ அஸாவே ஹே

மணாசீ தே$^{1}$ சாலீ மோஹாா ஸீசீ தே ஹோய
ஓக$^{4}$ கங்கா கா$^{1}$ய ப$^{1}$ரதோ$^{1}$ ஜாயா

துகாம்ஹணே மோடீ$^{2}$ உதா$^{3}$ர மேக$^{4}$ சக்தீ
மாஜீ த்$^{1}$ருஷா கி$^{1}$தீ சாத$^{1}$கா$^{1}$சீ"

"தன் குழந்தைக்கு அணி அலங்காரம் செய்து பார்ப்பதில் தாயின் ஆசைக்கு எல்லையேது? ஸாதுக்களாகிய நீங்கள் தாய் தந்தையராக தீனனான என்னைப் பரிபாலிக்கிறீர். குழந்தை கோபமாகப் பேசிடினும் தாய் அதனை சந்தோஷமாகவே ஏற்று மனத்தில் அடக்கிடுவாள். தன் குழந்தையின் குண தோஷங்களைக் கண்டு கொள்ளாமல், அதன் நலனையே இச்சிப்பாள். அதன்மேல் உள்ள மோகத்தால் அதன் மனங்கோணாது நடந்திடுவாள். ஓடும் கங்கை திரும்புமா என்ன? ஸாதுக்களாகிய உங்கள் உதார குணம் பெரும் மழைமேகம் போல! ஆனால் என்னுடைய தாகமோ சாதகப்பக்ஷி போலதான்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(ஸாதுக்களின் அருள்புரியும் தன்மைக்கு எல்லையே இல்லை என்பது குறிப்பு)

"தன் கன்றின் மீதே கவனம் வைக்கும் தாய்ப்பசு போன்று ஸாதுக்கள் என்னிடம்

தங்கள் கவனத்தைக் கொண்டுள்ளனர்"

*- துகாராம்*

55. *வாஞ்ஜா3 கா3யீ து3ப்4தீ1*
*தேவா ஐஸீ துஜீ க்2யாதீ1*

*ஐஸே மாக3த்1 நாஹீ து1ஜ*
*சரண தா3க2வாவே மஜ*

*சா1த1கா1 பாக2ரு த்யாஸீ வர்ஷே மேக4தா4ரு*
*பக்ஷி ராஜ ஹம்ஸ அமோலிக1 மோ1தீ த்1யாஸ*

*துகாம்ஹணே தேவா*
*கா(ம்) கா3 கோ2சலாஸீ ஜீவா*

"மலட்டுப் பசுவும் உனதருளால் பாலை சுரக்கும் என்று உன் புகழ் இருக்க அப்படி ஒன்றையும் நான் உன்னிடம் கேட்வில்லையே! உனது காலடியை எனக்கு காட்டினால் போதுமே! சாதகப் பறவைக்காக மேகம் பொழிகிறது, ராஜ ஹம்ஸத்தினிடம் விலையுயர்ந்த முத்துக்கள் உண்டாகின்றன. இறைவா! என்னுடைய இந்தச் சொற்களெல்லாம் உன்னை உறுத்துகிறதா?" என்கிறார் துகாராம் ஸ்வாமி.

'தருக நின்பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே'

*- திருவாசகம்*

56. *கோட3ன் நாமே க்ஷீர - ப1ரீ ஸாக2ரே சாதீ2ர*
*தைஸே ஜாணா ப்ரம்ம ஞான பா3பு1டே3 தே ப1க்தீவிண*
*ருசீ நேதீ1 அன்ன த்1யாந்த1 நஸதா1 லவண*
*ஆந்த4ள்யாசே ச்ரம -ஸீக1வில்யாசசீ நாம*
*துகாம்ஹணே வீணா தா1ரா வீண வ்யர்த்த2 ஜாணா*

"பால் ருசியாகயிருப்பினும் சர்க்கரையுடன் சேர்ந்தபின் அதன் சுவை கூடுகிறது. உப்பிட்ட பதார்த்தங்கள்தான் சுவையுள்ளதாக உள்ளன. கண் இல்லாதவன் கற்ற வித்தை, கற்பது என்பதோடு முடிந்துவிடுகிறது. (அக்ஷரங்களின் உருவம் அவனுக்கு தெரியாததால் கற்பதில் சுவை குன்றிவிடுகிறது) கம்பிகள் அறுந்து போன வீணை வீணானதே. இவ்வாறு பக்தியில்லாத பிரம்ம ஞானம் சிறப்பதில்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'சுத்த ஸ்படிக மாலையைப் போன்றது ஞானம். நவரத்ன மாலையைப் போன்றது பக்தி.'

- *ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள்*

57. *டோ3யீ வாட4லூனி கேச*
*பூ4தே ஆணீதீ அங்கா3ஸ*

*த1ரீ தே1 நவ்ஹறதீ1 ஸந்த ஜன*
*தே1 தே2 நாஹீ ஆத்மகு3ண*

*மேளவூனி நரநாரீ*
*சகு1ண ஸாங்க3தீ நானாப1ரீ*
*துகாம்ஹணே மைந்த3 நாஹீ*
*த்யாபா1சீ கோவிந்த*

"தலையில் ஜடாமுடி வளர்த்துக் கொண்டு உடலில் ஆவேசத்தை வரவழைக்கின்றனர். ஜனங்களைக் கூட்டி பலவித அருள் வாக்குகளைச் சொல்கின்றனர். ஆனால் ஆத்ம குணம் இல்லாத இவர்கள் ஸாதுக்களாக மாட்டார்கள். வெறும் வெளிவேஷக்காரர்களான இவர்களிடம் இறைவன் (கோவிந்தன்) இருக்கை கொள்வதில்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"ஸாதுவானவன் உலக விஷயங்களைப் பற்றி பேசுவதில்லை. பகவத் விஷயத்தைப் பற்றியே பேசுகிறான்"

- *ஸ்ரீ ராமகிருஷ்ணர்*

58. *ஸாக2ரேச்யா கோ3ண்யா பை3லாசீயே பர்டீ2*
*தயாஸீ சேவடீ1 க1ரபா3டே3*

*மாலாசே பை1 பே1டே1 வாஹதா1தீ1 உன்ட்டே*
*தயா லாகீ கான்ட்டே1 ப4க்ஷாவயா*

*வாவுகா3 ஹா த4ந்தா3 ஆசா தாட4வீஸீ*
*பாந்தோ4னியா கே4ஸீ யமா ஹாதீ*

*ஜ்யாஸீ அஸே லாப4 தோ1சி ஜாணே கோடீ3*
*துகாம்ஹணே எவரீ பா3பு1டே3 சிணலீ வாயா.*

"சர்க்கரை மூட்டைகளை எருது சுமப்பினும் அதற்குக் கிடைப்பது காய்ந்த வைக்கோல்தானே! ஆபரணங்கள் நிறைந்த பெட்டிகளை ஒட்டகம் சுமந்தாலும் அதற்குத் தீனியாக கிடைப்பது முட்செடிகள்தானே? வீணாக ஆசைகளைப் பெருக்கிக் கொள்வாயாகில் நீ யமன் கையில் தான் அகப்படுவாய். எவன் கொடுத்து வைத்துள்ளானோ அவன்தான் லாபமடைகிறான்; மற்றவர் வீணில்துயரமேயடைகின்றனர்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(இறைவன் தாளையடைபவன்தான் சுகம் பெறுகிறான்)

**"திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன் இளைத்து நின்று ஆடுகின்றேன் என் செய்வான் தோன்றினேனே"**

**- *அப்பர் ஸ்வாமிகள்***

**"கழுதை குங்குமந்தான் சுமந்தெய்த்தாற் கைப்பர் பாழ்புக மற்றது போல"**

**- *சுந்தரமூர்த்தி நாயனார்***

*59.* ***குமுதி்னீ கா$^1$ய ஜாணே தோ$^1$ ப$^1$ரிமள***
***ப்ரமர ஸகள போகீதஸே***

***தை$^1$ளே து$^1$ஜ டா$^2$வே நாஹீ துஜே நாம***
***ஆம்ஹீசதே ப்ரேம ஸுக$^2$ ஜாணோ***

***மாதே$^1$ த்$^1$ருண பாளா து$^3$தாசீ தே$^1$கோ$^3$டீ***
***ஜயாசீ நயே ஜோடீ த்யாஸீ கா$^1$மா***

***துகா ம்ஹணே முக்தாப$^2$ள ஸிம்பீ$^1$ போ$^1$டீ***
***நாஹீ த்யாசீ பேடீ$^1$ போக தி$^1$யே***

"தாமரைப்பூ தன் பரிமள வாஸனையை அறியாது; வண்டுகள்தான் அதனை நுகருகின்றன. உன் நாமத்தின் பெருமையை, இறைவா! நீ அறியமாட்டாய். அந்த நாமசுகத்தை நாம்தான் அறிவோம். தாயின்பால் குழந்தைக்குத் தான் ருசிக்கும். அது தாய்க்கு ஒரு வேலைக்கும் உதவுவதில்லை. நன்முத்தைக் கொண்டுள்ள சிப்பியானது அதனைப்பார்ப்பதுமில்லை அனுபவிப்பது மில்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(இறைவன் பலனைக் கொடுக்கும் 'தாதா' -எதனையும் அனுபவிக்கும் 'போக்தா' இல்லை)

"தம் பெருமை தானறியாத்
தன்மையன் காண் சாழலோ"

- திருவாசகம்

60. து[1]ஜே ம் ஹணோ ஆம்ஹா
மக[3] உணே புருஷோத்தமா

ஜஸா த[4]ர்ம கா[1]ய
அம்ருதானே ம்ருத்யு ஹோய

கல்பவ்ருக்ஷா த[1]ளீ
கா[3]ன்ட்டீ[2] பா[3]ந்தீளியா ஜோளீ

துகாம்ஹணே ப[1]ரீஸ
ஸாம்படல்யா உப[1]வாஸ

"ஏ புருஷோத்தமா! உன்னுடையவனான நான் குறைவுள்ளவனாகவே இருக்கிறேன். இது என்ன நியாயம்? அம்ருதத்தால் மரணம் நேரிடுமா? கற்பக விருக்ஷத்தின் அடியில் இருந்து கொண்டு பிச்சை எடுக்கவேண்டுமா? பரிசவேதிக் கல் கிடைத்தும் பட்டினியா?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

ஆரடியாளென்னின் உத்தர கோச மங்கைக்கரசின் சீரடியாரடியானென்று நின்னைச் சிரிப்பிப்பனே"

- திருவாசகம்

61. ஜன்மோ ஜன்மீசே ஸஞ்சித
பே[4]டீ[1] ஜாலீ அக[1]ஸ்மாத[1]

ஆதா ஸோடி[3]தா ஸூடே[1]ணா
த[1]ந்து[1] ப்ரீதீசா து[1]டே[1]ணா

மாஜே சித்தது ஜ்யா பா[1]யா
மிடீ[2] ப[1]டி[3]லீ பண்டரீராயா

துகாம்ஹணே அந்தீ[1]
துஜீமாஜீ ஏக[1] க[3]தி

"பல ஜன்மங்களில் சேர்ந்த புண்ய வசத்தால் தற்செயலாக உன் தரிசனம் கிட்டியது. இனிமேல் நீ விட்டாலும் நான் விடமாட்டேன். நம்முள் இருக்கும் பிரேமை எனும் நூல் இழை அறுபடாது. ஏ பண்டரீ நாதா! என் சித்தமெல்லாம் உந்தன் காலடியில் இருக்க அதையே பிடித்துக் கொள்வேன். இறுதியில் நீதான் எனக்கு கதி" என்கிறார் துகாராம் ஸ்வாமி

**"சேய மாமலர்ச் சேவடிக்கண் நம் சென்னி மன்னித் திகழுமே"**

*- திருவாசகம்*

*62. டோ$^{3}$ளியாஞ்சே தைவ ஆஜி உபே$^{4}$ டே$^{2}$லே*
*நிதா$^{4}$ன தே$^{3}$கீ$^{}$லே பண்டரியே*

*காயதே வானாவே வாசேசே பா$^{1}$லவே*
*வேதா$^{3}$ ந போ$^{3}$லவே ரூப ஜ்யாசே*

*ஆனந்தாச்யா ரஸ ஓ$^{1}$தீவ சாங்க$^{3}$லே*
*தே$^{3}$ க$^{2}$தா ரங்க$^{3}$லே சித்த மாஜே*

*துகாம்ஹணே மீ தோ ஸக$^{3}$ளாச விராலோ*
*விட்டலசி ஜாலோ த$^{3}$ர்சனானே"*

"கண்டார் தங்கண் குளிரும் களிக்க நின் முகந்தனை, பண்டரீபுரத்தின் பெரு நிதியை, இன்று என் கண் முன் நிற்கக் கண்டேன். எந்த உருவத்தை வேதங்களும் பேசுவதில்லையோ அப்பேற்பட்ட உருவத்தை என் வாக்கால் எவ்விதம் வர்ணிப்பேன்? யாது சொல்லிடுவேன்? ஆனந்த ரஸத்தின் அழகிய வார்ப்பாக உள்ள அந்த உருவத்தைக் காண சித்தம் கிறங்குகிறது. நான் என்னையே இழந்து அவன் தரிசனத்தில் விட்டலனாகவே ஆனேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**'கண்டேன் அவர் திருப்பாதம்! கண்டறியாதன கண்டேன்'**

*- அப்பர்*

*63. நிபு$^{1}$த்ரிகா$^{1}$ ம்ஹணதீ முக$^{2}$ ந$^{1}$பஹா ஹோ*
*பா$^{1}$த$^{1}$கா$^{1}$சே மூள போ$^{1}$ரவடா$^{3}$*

*லோக$^{1}$ ஜைஸா ஓக்$^{1}$ த$^{4}$ரிதா$^{1}$(ம்) த$^{4}$ரவேனா*
*அபக்தா$^{1}$ ஜிரேனா ஸந்த$^{1}$ஸங்க$^{3}$*

*துகாம்ஹணே ஆதா[3] ஐகா[1]வே வசன*
*த்யஜு னியா ஜன பக்தி க[1]ரா*

"பிள்ளைப்பேறு இல்லாதவள், பிள்ளைக் குட்டிகளால்தான் எல்லாதுன்பங்களும் வருவதாகச் சொல்லி குழந்தைகளை பார்க்க விரும்பமாட்டாள். வாயிலடுக்க வந்துவிட்டால் அதனை எவ்விதம் அடக்க முடியாதோ அதே போன்று ஸாதுக்களின் ஸங்கம் பக்தி ஹீனர்களுக்கு ஒட்டாது. இம்மாதிரி யான மனிதர்களை துறந்துவிட்டு இறைவனிடம் பக்தி பூணுங்கள்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"லௌகிக புத்தியைக் கொண்டு தெய்விக விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியாது"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

64. *ஜனனீ ஹே ஜாணே பா[3]லகா[1]சே வர்ம*
*ஸுக துக்க த[4]ர்ம ஜே ஜே கா[1]ஹீ*

*அந்தா[4]புடே[4] ஜேணே தி[4]த[4]லா ஆதா[4]ர*
*த்யாசா ஹா விசார தோ[1]சி ஜாணே*

*சரணாகதா ஜேணே காதலே பாடீ[2]சீ*
*தோ ஜாணே தே[1]விசீ ராகோ[2] த[1]யா*

*காஸே லாகே[3] த[1]யா நலகதீ[1] ஸாயாஸ*
*போஹோணரா த்[1]யாஸ பா[1]ர பா[1]வீ*

*துகாம்ஹணே ஜீவ விட்டலாசே ஹா[1]தீ*
*தி[3]லா த்யாசீ க[1]தி தோ[1]சி ஜாணே*

"குழந்தையின் சுக துக்கங்கள், அதற்குச் செய்ய வேண்டியவை என எல்லாவற்றையும் அதன் தாய்தான் அறிவாள். குருடனுக்கு ஆதரவு கொடுத்தவன் தான் அவனைப் பற்றிக் கவலை கொள்வான். சரணடைந்தவனை எப்படிக் காப்பாற்றுவது என்பதை அடைக்கலம் தந்தவன்தான் அறிவான். முழுகுபவனுக்கு சிரமம் தெரியாது. அவனைக் காப்பாற்றிக் கரைக்குக் கொண்டுவருபவன்தான் பொறுப்பை ஏற்கிறான். விட்டலன் கையில் இந்த ஜீவனை ஒப்படைத்துவிட்டால் அதன் கதிக்கு அவன்தான் பொறுப்பாகின்றான்" என்கி

றார் துகாராம் ஸ்வாமிகள்.
(பக்தனின் யோக க்ஷேமத்தை இறைவன் கவனித்துக் கொள்கிறான்)

"உன் பாதமேயல்லால் பற்று
நான் மற்றிலேன் கண்டாய்"

- திருவாசகம்

65. ஆப்1ணா லாகே3 கா1ம வாண்யா க்4ரீ கூ3ள
த்யாசே யா1தி கு1ள கா1ய கீ1ஜே

உக1ரட்யாவரீ வாட்4லீ து1ளஸீ
டா1காவீ தே1 கைஸீ டா2யா குணே

கா3யீச்யா ஜீ ப்4கூஷ அமங்கள கா2ய
தீ1சே து3க்3த4 கா1ய ஸேவூ நயே

துகாம்ஹணே கா1ய ஸலபடா1ஸீகா1ஜ
ப2ணஸாந்தீல பீஜ3 காடு4னி க்4யாவே"

வியாபாரியின் வீட்டிலிருக்கும் வெல்லம்தான் நமக்கு வேண்டும்; அவனு டைய குலம், கோத்திரம், ஜாதி முதலிய விவரங்கள் எதற்கு? குப்பையில் வளர்ந் தாலும் துளஸியை தூக்கி எறியலாமா? கண்டதைச் சாப்பிட்டாலும் அந்தப் பசுவின் பால் அருந்தப்படாமல் உள்ளதா என்ன? தோலை உறித்துவிட்டு பலாச்சுளையைத்தான் எடுத்துக் கொள்ளவேண்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.
(ஸாதுக்களுடைய குலம், கோத்திரம் பற்றிய விசாரணை தேவையற்றது என்ப தானது சுட்டப்பட்டுள்ளது.)

"ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு
அன்பராகில், அவர் கண்டீர் நாம்
வணங்கும் கடவுளாரே"

- திருநாவுக்கரசர்

66. பே4 டீ1 லாகீ ஜீவா லாக3லீஸே ஆஸ
பா1ஹே ராத்ரம் திவஸ வாட1 துஜீ

*பூர்ணிமே சா சந்த்ர சகோரா ஜீவன*
*தைஸே மாஜே மன வாட[1] பாஹே*

*தீவாளிச்யா முளா லேங்கீ ஆஸாவலீ*
*பா[1]ஹதஸே வாடு[1]ளீ பண்டரீசீ*

*பு[4]கேலியா பா[3]ள அதி சோக க[1]ரீ*
*வாட[1] பாஹே ப[1]ரி மாவுலீசீ*

*துகாம்ஹணே மஜ லாக[3]லீஸே பூ[4]க[1]*
*தா[4]வூணீ ஸ்ரீமுக தாவீ தே[3]வா*

"இறைவா! உன்னைக் காண இரவு பகலாக ஆவலுடன் காத்துள்ளேன். பூரண நிலவைப் பருக காத்திருக்கும் சகோர பக்ஷி போல என் மனம் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. தீபாவளி பண்டிக்கைக்கு பிறந்த வீட்டிலிருந்து அழைப்பை ஆவலுடன் எதிர்பார்க்கும் பெண்பிள்ளையைப் போல பண்டரிபுரத்திலிருந்து அழைப்பை ஆசையுடன் எதிர்பார்க்கிறேன். பசியால் குழந்தை தாயைக் குறித்து அழுவதுபோல உன்னைக் காணவேண்டும் எனும் பசி கொண்டுள்ளேன். ஓடிவந்து உண் திருமுகத்தைக் காட்டுவாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"என் கண்கட்குத்திண் கொள்ள ஒருநாள்**
**அருளாய் உன் திருவுருவே"**

**- நம்மாழ்வா**

67. *தே[3]வ ஸகா[1]ஜரீ - ஜக[3] அவகே[4] க்ருபாக[1]ரீ*
*ஐஸா அஸோனி அநுப[4]வ -*
*காஸா விஸ ஹோதோ[1]ஜீவ*
*தேவாசீ ஜத[1]ன - த[1]யா பா[3]தூ[4] நசகே[3] அக்ன*
*துகாம்ஹணே ஹரீ -ப்ரஹ்லாதாஸீ யத்னகரீ*

"இறைவன் எவன் ஒருவனுக்கு துணையாக, நண்பனாக இருக்கின்றானோ, அவன்பால் எல்லோருமே க்ருபை கொள்வர். இப்படியான அனுபவம் தெரிந்திருந்தும் (மனமானது) இந்த ஜீவனானது கலக்க முறுகிறதே! 'இறைவனின் பாதுகாப்பில் உள்ளவனுக்கு நெருப்புகூட யாதும் செய்ய இயலாது. பக்த ப்ரஹலாதனை ஸ்ரீ ஹரி எல்லாவிதத்திலும் காப்பாற்றவில்லையா?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

“ஜியாசா ஸகாஹரீ - த்யாவரீ விஷ்வ க்ருபா கரீ”

- ஜனாபாய்

68. வைஷ்ணவ தோ1ஜயா
அவ்4கீ தே3வாவரீ மாயா

நாஹீ ஆணிக ப்ரமாண
த1ன த4ன த்1ருண ஜன

ப1ட3தா1 ஜட3பா4ரீ - நேமா நட1ளே நிர்தா4ரீ
துகாம்ஹணேயாதீ
ஹோகா த1யாசீ ப4ளதீ

“இறைவனிடத்தில் ப்ரேம பக்தி பூண்டவனே ஒரு நிஜமான பாகவதனாகி றான். இறைவனின் மாயை என்று தெளிந்தவனுக்கு தம்மக்கள், மனை, செல் வம் எல்லாமே புல்லுக்கு சமானம்தான். எவ்வளவு பெரிய துன்பம் நேரிடினும் அவன் இறைவனிடம் குறைவிலா பக்தியையே பூண்டிருப்பான். அவன் எந்த் ஜாதியானாலும் அவன் ஒரு பாகவதன்தான்” என்கிறார் துகாராம் ஸ்வாமி கள்.

“குடிமையில் கடமைபட்டு குக்கரில் பிறப்பரேலும்
மொய்கழற்கன்பு செய்யும் அடியாரை யுகத்திபோலும்”

- தொண்டரடிப்பொடி ஆழ்வார்

69. ஆணிக1 கா1ஹீ மஜ நாவடே3 மாத1
ஏகா பண்டரீ நாதா வாசூனியா

த்யாசீச க1தா2 ஆவடே3 கீர்த்தன
தே மஜ ச்ரவண கோ3ட3லாகே3

துகாம்ஹணே ஸந்த ம்ஹணோத1 ப4லதே1
விட்டலாப1ரதே1 ந மனீ கா1ஹீ

“பண்டரிநாதனைத் தவிரவேறு எந்த விஷயத்திலும் எனக்கு விருப்ப மில்லை. அவனுடைய கதை பிடித்தமாயுள்ளது. அவனைப் பற்றிய கீர்த்தனை யைக் கேட்கவே ஆசைப்படுகிறேன். அதுதான் மனதிற்கு இனிமையளிக்கி

றது. ஸாதுக்கள் பலவற்றைச் சொல்லிடினும் விட்டலன் ஒருவனே என் மன தில் தங்குகிறார்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"வானேயும் பெறில்வேண்டேன்... உன்னருள் பெறும் நாள்
என்றென்றே வருந்துவனே"

- திருவாசகம்

70. *ஆளவீன ஸ்வரே -கை$^{1}$ஸா மது$^{3}$ரா உத்த$^{1}$ரே*
*யே வோ பாண்டுரங்கே -*
*ப்ரேம பான்ஹா மஜ தே$^{3}$(ம்) கே*
*ப$^{1}$ஸருனி சோஞ்சீ -வசனே ஹீ க$^{1}$ருணேசீ(ம்)*
*துகாம்ஹணே ப$^{3}$ளீ -ஆம்ஹீ லடி$^{3}$வாளே ஆளீ*

"இனிய வார்த்தைகளைக் கொண்டு வேண்டியதைக் கேட்டு அடம் பிடிப்பேன். நீ கேட்பதற்கெல்லாம் பதிலளிப்பேன். பாண்டுரங்கா! என்னருகில் வந்து உன் ப்ரேம ரஸத்தைப் புகட்டுவாயாக.. பறவைக் குஞ்சுகள் தன் தாயிடம் அலகுகளை விரித்து உணவை வேண்டுவது போல்தான் உன் கருணையை நான் வேண்டுவதும். உன்னிடம் செல்லம் கொண்டுதான் பயமின்றி அடம் பிடித்துத் தேவையானதைக் கேட்கிறேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க
அன்பே மேவுதலே'

- திருவாசகம்

71. *ப$^{3}$ரவீ நாமாவளீ - துஜீமஹா தோ$^{3}$ஷா ஹோளீ*

*ஜாலே ஆம்ஹாஸீ ஜீவன*
*த$^{4}$ணீவரி ஹே ஸேவன*

*ஸோபே$^{1}$ ஆணி கோ$^{3}$ட*
*கி$^{1}$தீ அம்ருதாஹீ வாட$^{3}$*

*துகாம்ஹணே அச்யுதா*
*ஆமசா கல்பத ரூதா$^{3}$தா$^{1}$*

"உன்னுடைய நாமாவளி (ராமா, கிருஷ்ணா ஹரி, விட்டலா என்று) இனிமையானது. அதைச் சொல்வதால் மகத்தான தோஷங்களெள்லாம் எரிந்துவி

டுகின்றன. ஜீவனுக்கு முக்கியமான ஜலம் போன்றுள்ள உன் நாமாவளியை திருப்தியாகும் வரை அனுபவிக்கலாமே? நாமாவளி சுலபமாகவும், இனிமையில் அம்ருதத்தைக் காட்டிலும் சிறந்ததாகவும் விளங்குகிறதே! அச்யுதனே! நீ கற்பக விருக்ஷம் போன்று கேட்பதையெல்லாம் வழங்குபவன் அன்றோ" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

ஏதேனும் ஒரு திருநாமத்திலாவது ஒருவனுக்குச் சுவை ஏற்படுமாகில் அவன் அஞ்சுதற்கு ஒன்றுமில்லை. கடவுள் பற்று அவனுக்கு நாள் ஏறஏற அதிகரிக்கும்; பேரானந்தம் மேலிடும்

- *ஸ்ரீ ராமகிருஷ்ணர்*

72. *க$^{1}$ரிதா கோ$^{1}$ணாசே ஹீ கா$^{1}$ஜ*
*நாஹீ லாஜ தேவாஸீ*

*ப$^{3}$ரே க$^{1}$ராவே ஹே கா$^{1}$ம*
*த$^{4}$ரிலே நாம தீனபந்து*

*க$^{1}$ரூனி அரானுக$^{1}$ பா$^{1}$ஹே*
*ப$^{4}$லத்யா ஸாஹ்ய வ்ஹாவயா*

*போ$^{3}$லே தைஸே க$^{1}$ரணீ க$^{1}$ரீ*
*துகாம்ஹணே ஏக$^{1}$ ஹரீ"*

"தன் பக்தனுக்காக எவ்வித வேலையையும் வெட்கப்படாமல் செய்திடுவான் இறைவன். தீனபந்து என்று பெயர் கொண்ட இறைவன், எளிய பக்தர்களின் பாவனையை அறிந்து அவர்களுக்கு உதவுவதே தன் வேலையாகக் கொண்டவன். எல்லோருடைய குறைகளையும் அறிந்து தகுந்தவாறு உதவி செய்து சுகத்தையும் அளிக்கிறான். சொல்வது போல் செயல்படுவான் என்னுடைய ஸ்ரீ ஹரி" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"அர்ஜுனாசே கோடேது தா -லாஜ நாஹீ த்யாஸீ சே
சோகா மேளா ஸங்கே ஜேவீ -தஹீதூத பாதகே"

-*ஸமர்த்த ராமதாஸர்*

73. *நாம கே$^{4}$தா நலகே$^{3}$ மோல*
*நாம மந்த்ர நாஹீ கோ$^{2}$ல*

தோ3ஞ்சி அக்ஷராஞ்சே கா1ம
உச்சாராவே ராம ராம

நாஹீ வர்ண த4ர்ம யா1தீ
நாமீ அவகீஞ்4சி ஸர1தீ"

துகாம்ஹணே நாம
சைத1ன்ய நிஜ தா4ம

"இறைவன் நாமத்தை உச்சரிப்பதில் யாருக்கும் செலவோ கஷ்டமோ இல்லை. இரண்டு எழுத்துக்களைக் கொண்ட 'ராம' நாமத்தை எளிதாக உச்சரிக்கலாமே? நாமத்தைச் சொல்ல எல்லோருக்கும் அதிகாரம் உண்டு. ஜாதி, வர்ணம், தர்மம் என்று ஒரு தடையுமில்லை. 'ராம' நாமம் உயிருள்ளது. இறைவனின் இருப்பிடமும் அதுவே" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பைஸலீயோ டாயீ ம்ஹணதா ராம ராம
காய ஹோய ச்ரம ஐஸே ஸாங்கா"

- துகாராம்

74. ஹோவுனி க்ருபாள பா4ர கே4த1லா ஸகள

தூஞ்சி சாலவிஸீ மாஜே
பா4ர ஸகள ஹீ ஓஜே

தே3ஹ து1ஜ்யா பா1யீ
டே2வூனி ஜாலோ உத1ராயீ

கா1யா வாசா மனே
துகாம்ஹணே து3ஜே நேணே

"இறைவா! என் மீது தயை கொண்டு, என்னுடைய சுமையெல்லாவற்றையும் ஏற்று, என் யோக க்ஷேமத்தையும் நடத்திச் செல்கிறாய். இதற்கு நான் செய்யும் பிரதி உன் காலடியில் என் தேகத்தைக் கிடத்துவதுதான். இந்த சரீரம், மனம், வாக்கு எல்லாம் உன்னையன்றி மற்றொன்றையும் அறியாது என்கிறார் ஸ்ரீ துகாராம் ஸ்வாமிகள்.

"ஈசன் அருளால் உனது உலக வாழ்க்கை
நிகழ்ந்து வருகிறது என்று உணர்"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

75. விட்டல ஹா சித்தீ(ம்)
கோட$^{3}$ லாகே$^{3}$ கா$^{3}$தா கீ$^{3}$தீ

ஆம்ஹா விட்டல ஜீவன
டாள சிபளியா த$^{4}$ன

விட்டல ஹே வாணீ
அம்ருத ஹே ஸஞ்ஜீவனீ

ரங்கலா யா ரங்கே
துகா விட்டல ஸர்வாங்கே

"விட்டலனைப் பாட மனதில் இனிமை பிறக்கிறது. சிப்ளாக் கட்டை, தாளம் முதலியவைதான் என் சொத்து., விட்டலன்தான் என் உயிரெல்லாம், விட்டல நாமம் அம்ருத சஞ்ஜீவனியைப் போன்ற ஆற்றல் கொண்டது. விட்டல நாமம் சொல்வதில் ஏற்றம் கொண்டு மெய்மறந்த நிலையில் விட்டலனிடமே தோய்ந்துள்ளேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"பகவானுக்கும் அவனுடைய திருநாமத்திற்கும் இடையில் வித்தியாசம் இல்லை. நாமம் நாமிக்கு நிகர்"

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

76. நயோ வாசே$^{1}$ அனுசித வாணி
நஸோ மனீ கு$^{1}$டி$^{3}$ புத்தி

ஐஸே மாகா அரே ஜனா
நாராயணா வினவூனி

காம க்ரோதா$^{4}$(ம்) படோ சிரா
ஐஸா ப$^{3}$ரா ஸாயாஸ

துகாம்ஹணே நாநா சந்தே$^{3}$

*யா வினோதே3 ந படா3வே*

"மனதில் கீழ்த்தர எண்ணங்களோ, வாக்கில் உசிதமில்லாத வார்த்தைகளோ வரவேண்டாம். நீங்களும் ஸ்ரீமந்நாராயணனிடம் இதையே வேண்டிடுங்கள். காம குரோதங்கள் அடங்கத் தேவையான முயற்சியை மேற்கொள்ளுங்கள். ஏளனம் செய்வது, பரிகாசமாகப் பேசுவது இவைகளிலெல்லாம் ஈடுபட வேண்டாம்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**'நாடகம் ஒன்றை வேடிக்கை விநோதங்களில் முடிவுக்கு கொண்டு வரலாகாது. பகவத் பக்தியை ஊட்டுகிற முறையில் அதை முடிக்க வேண்டும்.'**

**- *ஸ்ரீ ராமகிருஷ்ணர்***

77. *ப1சு ப1க்ஷீயான்ஸீ நாஹீ ஆத்ம ஞான*
*காய நாராயண ஜாண தா1தீ1*

*நரதே3ஹ வாடா1 ஹரீ ஜாணாவயா*
*அதி1கா1ர த1யா தி3லே தே3வே*

*ப்1ராசினாஞ்சே ப3லே அம்ருதஜோ ஹோய*
*தே1சி த4ரி ஸோய ஹரிபா1யீ*

*துகாம்ஹணே தே3ஹீ சுக1லியா ஹரீ*
*ஆலீ த1யா பே2ரீ சௌர்யான் சீசீ*

"விலங்குள், பறவைகள் இவற்றிற்கு ஆத்ம ஞானம் கிடையாது. அவை ஸ்ரீமந் நாராயணனை எவ்வாறு அறியப் போகின்றன? மானுட தேகத்தின் மூலம் இறைவனை அடைந்திடவே மனிதனுக்கு அந்த அதிகாரத்தை கொடுத்துள்ளான் இறைவன். முன்காலத்தில் எந்த ஒரு(ஸ்ரீஹரியின்) பலத்தின் மீது அமிர்தம் கிடைத்ததோ, அந்த ஸ்ரீ ஹரியின் பாதங்களைப் பிடித்துக் கொள்ள வேண்டும். இந்தத் தேகம் உள்ள போதே ஸ்ரீ ஹரியை அடையாவிட்டால் திரும்பவும் பிறப்பு -இறப்பு எனும் சுழலில் அகப்படுவான்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

**"வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்"**

**- *திருநாவுக்கரசர்***

78. ஆனந்தா$^{3}$சே டோ$^{3}$ஹீ ஆனந்த$^{3}$ த$^{1}$ரங்க
ஆனந்த$^{3}$ சி அங்க$^{3}$ ஆனந்தா$^{3}$சே

கா$^{1}$ய ஸாங்கோ$^{3}$ ஜாலே கா$^{1}$ஹீஞ்சியா பா$^{3}$யீ
புடே$^{4}$ சாலீ நாஹீ ஆவடி$^{3}$னே

க$^{3}$ர்பா$^{4}$சே ஆவடி மாதே$^{1}$சா டோ$^{3}$ஹளா
தே$^{2}$தீஞ்சா ஜிவ்ஹாளா தேதே$^{2}$ பி$^{1}$ம்பே

துகாம்ஹணே தை$^{1}$ஸா ஒத$^{1}$லாஸே ட$^{2}$ ஸா
அநுப$^{4}$வ ஸரிஸா முகா$^{2}$ ஆலா

ஆனந்தத்தின் உச்சிமீது ஆனந்தத்தின் அலை. ஆனந்தத்தின் அங்கமே ஆனந்த மாகிறது. (நீரின்மேலே அலை; அலை நீரின் அங்கம் என்று மற்றொரு அபங் கத்தில் துகாராம் பாடுகிறார்) ஒன்றுமே மனதிற்கு பிடித்தமானதாகத் தெரிய வில்லையே! தாய்மை அடைந்த மாதர்களின் விருப்பத்தின் தன்மைக்கு ஏற்ப பிறக்கும் குழந்தை இருக்கும் என்று சொல்வதுபோல உள்ளே நிரம்பியுள்ள ஆனந்த அனுபவத்தின் வெளிப்பாடு முகத்தில் அச்சாக வந்துள்ளதாகப் பாடு கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

(குறிப்பு: தாய்மையடைந்த தம் மனைவிகளிடம் அவர்களின் ஆசையைப்பற்றி தசரத மகாராஜா கேட்டதாக இராமாயணத்திலும் வருகிறது).

"இன்பமே எந்நாளும் துன்பமில்லை"

- அப்பர்

79. கே$^{2}$ள மாண்டி$^{3}$யேலா வாளவண்டீ$^{1}$ காயீ
நாச$^{1}$தீ வைஷ்ணவ பா$^{4}$யீரே$^{1}$

க்$^{1}$ரோத$^{4}$ அபி$^{1}$மான கே$^{1}$லா பா$^{1}$வட$^{1}$ணீ
ஏக$^{1}$ ஏகா$^{1}$ லாக$^{2}$தீ$^{1}$ல பா$^{1}$யீரே

நாசத$^{1}$ ஆனந்த$^{3}$ க$^{1}$ல்லோளீ பவித்ர
கா$^{2}$ணே நாமாவளீரே

க$^{1}$ளிகாளாவரீ கா$^{4}$த$^{1}$லீ கா$^{1}$ஸ

ஏக$^1$ ஏகாஹூனி ப$^3$ளீரே

கோ$^3$பீ சந்த$^3$ன உடி$^1$ து$^1$ளஸீச்யா மாளா
ஹார மிரவதீ களாரே

டா$^1$ள ம்ருத$^3$ங்க$^3$ கா$^4$யீ
பு$^1$ஷ்பா$^1$ஞ்சா வருஷாவ
அனுப$^1$ம்ய ஸுக$^2$ஸோஹளாரே

லுப$^3$த$^4$லீ நாதீ$^3$ லாகதி$^1$ ஸமா$^4$தி
மூட$^4$ ஜனநர நாரீ
லோகா$^1$ரே -ப$^1$ண்டி$^3$த$^1$ ஞானீ யோகீ மஹானுபா$^4$வ
ஏக$^1$சி ஸித்த ஸாத$^4$கா$^1$ ரே

வர்ணாபி மான
விஸரலீயாதீ$^1$
ஏக$^1$ஏகா$^1$ லோடா$^1$ங்க$^3$ணீ ஜா$^1$தீ ரே

நிர்மல சித்தே$^1$ ஜாலீ நவனீதே$^1$
பா$^1$ஷாண பா$^1$ஜரே

ஸுட$^1$தீரே
ஹோதோ$^1$ ஜயஜய கா$^1$ர க$^3$ர்ஜத$^1$
அம்ப$^3$ர
மாத$^1$லே வைஷ்ணவ வீரரே

துகாம்ஹணே ஸோ$^1$பீ கே$^1$ லீபா$^1$யவாட
தரா வயா ப$^4$வஸாக$^3$ர ரே

"பண்டரிபுரத்தில் சந்திரபாகா நதியின் மணற்பாங்கான இடத்தில் பாகவதர்கள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் (பாகவத தர்ம முறையில்) உல்லாஸமாக இருக்கின்றனர். க்ரோதமும், விஷயாபிமானமும் படிப்படியாக விலக ஒருவரையொருவர் சேவிக்கின்றனர். ஆனந்தமாக நாமாவளியைச் சொல்கின்றனர். புனிதமான இறைவனின் பாடல்களைப் பாடிக் கொண்டே ஒருவரையொருவர் மிஞ்சும் வகையில் இருக்க கலிகாலத்தை வென்றனர். துளஸீமாலைகள் கழுத்தில் புரள, கோபீசந்தனமணிந்து, மிருதங்கம் முதலிய தாளவாத்

தியங்களுடன் பாகவதர்கள் பாடுகின்றனர். மலர்கள் அவர் மீது சொரிய, எங் கேயும் காணாத இன்பத்திலிருந்து கொண்டு ஜனங்கள் தாள கீத நாதத்தில் மெய் மறந்து ஸமாதி நிலையில் உள்ளனர். பண்டிதர்களும் ஞானிகளும், யோகிகளும், ஸித்த ஸாதகர்களும் ஜாதி வித்தியாஸங்களை மறந்து ஒருவரை யொருவர் சுற்றிச் சுற்றிவந்து வணங்குகின்றனர். வெண்ணெய் போன்று தூய மனதாயினர். கல்லும் கரைந்தது. ஆகாயத்தில் ஜயஜய கோஷம் ஒலிக்க இறை வனைக் கொண்டாடிய பாகவதர்கள் ஸம்ஸாரக் கடலைக் கடக்க சுலபமான வழியயைச் செய்தனர்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"ஆடிப்பாடி அண்ணாமலை கை தொழ ஓடிப்போம் நமதுள்ள வினைகளே"
- அப்பர்

80. ஜேதே2 ஜாதோ1 தே1தே2 தூமாஜா ஸாங்கா3தீ
சாள விஸீ ஹா1தீ த4ருனியா

சாலோ வாடே1 ஆம்ஹீ து1ஜாசி ஆதா4ர
சாலவிஸீ பா4ர ஸவே மாஜா

போ3லோ ஜாதா1 ப3ரள க1ரிஸீ தேநீட
நேலீ லாஜ தீ4ட1 கே1லோ தே3வா

அவகே4 ஜன மஜ ஜாலே லோ1கபா1ள
ஸோயிரே ஸக1ள ப்1ராணஸகே2

துகாம்ஹணே ஆதா1 கே2ளதோ1 கௌ1து1கே1
ஜாலே து1ஜே ஸுக2 அந்த1ர்பா3ஹீ

"விட்டலனே! நான் எங்கு சென்றாலும் நீ துணையாகயிருந்து என் கையைப் பிடித்துக் கொண்டு வழி நடத்திச் செல்கிறாய். என் பொருட்டு எல்லாசுமைக ளையும் தாங்கிக் கொண்டும், என்னைக் காப்பாற்றிக் கொண்டும், நான் செல் லும் பக்திமார்க்கத்திற்கு ஆதாரமாக இருக்கின்றாய். என்னிடமிருந்து பொரு ளற்ற வார்த்தைகள் ஏதேனும் வெளிப்படாமல் அவற்றைச் செம்மையாக்குகி றய். என்னுடைய மானம், கௌரவம் இவற்றிற்கு குறைவராது என்னை தீரனா கச் செய்துவிட்டாய். எல்லா மக்களும் என்னுடைய உறவினர் போன்றும், உயிர் நண்பர்கள் போன்றும், உலகத்திற்கு நன்மையே செய்பவர் போன்றும் உள்ளனர். உனக்காட்பட்டபின் உள்ளும் புறமும் இன்பமாகி, உன்னுடன் உரி மையுடனும் விளையாடுகிறேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாது ஒருபோதும் இருந்தறியேன்"

- அப்பர்

81. ஜன்ம வரீ கே1லே(ம்) த்4யான
அந்தி1 தே1சி ஆட1வண

ஆளி பி1ங்கு3ளடீ1 ஜாளீ
பூ1ர்வ தே3ஹ விஸரலீ

கு3ரு ப4க்த1 ஹரி பா1ய
நிசி தி1னீ த்4யாத ஜாய

துகாம்ஹணே ஆத்மப1த3
சித்தீம் த்4யாஸதே4 கோவிந்த3

"ஜன்மம் முழுவதும் இறைவனை த்யானம் செய்ய, கடைசி காலத்திலும் அவன் நினைவுதான். (ஆனால்) ஆசைகள், பயங்கள் இவைதோன்ற முற்பிறவி பற்றியதானது மறக்கலாயிற்று. குருவிடம் பக்தி பூண்டு, இரவும் பகலுமாக ஸ்ரீ ஹரியின் காலடியை த்யானம் செய்வோம். ஆத்மானுபவம் பெற சித்தத்தில் அந்த கோவிந்தனின் நினைவே இருக்கவேண்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

82. விட்டல கீ3தீ1 கா3வா விட்டல சித்தீ1 த்4யாவா
விட்டல உபா4 ப1ஹாவா விடே1வரீ

அனாதா2சா ப3ந்தூ4 விட்டல க்ருபா ஸிந்தூ4
தோ1டீ3 ப4வப3ந்தூ யமபாச

தோ1சீ சரணாக3தா விட்டல முக்தி தா3தா1
விட்டலயா ஸந்தா1 ஸமாக3மே

விட்டல கு3ணநிதி வி1ட்டல ஸர்வஸித்தி1
லாகலீ ஸமாதி வி1ட்டல நாமே

விட்டலாசே நாம கே4தா ஜாலே ஸுக2
கோ3டா3 வலே முக2 துகாம்ஹணே

"செங்கல்லை பீடமாக (யோக பீடமாக) கொண்டு விட்டலன் நிற்பதைப் பாருஙகள். அவனைப் பாடுங்கள். அவனை த்யானியுங்கள். திக்கற்றவர்களின் துணைவனும் கருணைக் கடலுமான விட்டலன் இவ்வுலகக் கட்டுகளினின் றும், காலனின் பாசத்தினின்றும் விடுவிப்பான். சரணாகத வத்ஸலனான அவனே முத்தியையும் அளிப்பவன். ஸாதுக்களின் கூட்டத்திலும் இருப்ப வன். எல்லாக் குணங்களும் ஸித்திகளும் நிரம்பியவன். வாய் மணக்கும் விட் டல நாமத்தைச் சொல்லிட மனது சுகமடைந்து ஸமாதியில் ஆழ்கிறது" என்கி றார் துகாராம் ஸ்வாமிகள்.

"பாடுவார் பசி தீர்ப்பாய்! பரவுவார் பிணி களைவாய்"

- சுந்தரர்

83. ஸதா$^{3}$ நாமகோ$^{4}$ஷ க$^{1}$ரூ ஹரிகதா$^{2}$
தே$^{1}$ணே ஸதா$^{3}$ சித்தா$^{1}$ ஸமாதா$^{4}$ன

ஸர்வஸுக$^{2}$ ல்யாலோ ஸர்வ அலங்கா$^{1}$ர
ஆனந்தே$^{3}$ நிர்ப$^{4}$ர டு$^{3}$ல்லத$^{1}$ஸோ

அஸோ ஐஸா கோ$^{1}$டே$^{2}$ ஆட$^{2}$வசி நாஹீ
தே$^{3}$ஹீஞ்ச விதே$^{3}$ஹீ போ$^{4}$கூ$^{3}$ த$^{3}$சா

துகாம்ஹணே ஆம்ஹீ ஜாலோ அக்$^{3}$னி ரூப$^{1}$
லாகோ$^{3}$ நேதூ$^{3}$ பா$^{1}$ப$^{1}$ பு$^{1}$ண்ய அங்கா$^{3}$

"சித்தமானது ஸமாதான நிலையில் (பக்திபாவத்துடன் இறை சிந்தனையில்) எப்போதும் இருந்திட ஹரி கீர்த்தனையும், நாமகோஷமும் செய்திடுவோம். சப்த அலங்காரம், அர்த்த அலங்காரங்கள் நிரம்பிட (மொத்தம் 68 அலங்கா ரங்கள்) ஆனந்தமாகப் பாடி ஆடிடுவோம். வேறெதிலும் நினைவின்றி தேகம் தன்னை மறந்த நிலையிலான சுகத்தை அனுபவிப்பேன். இப்படியாக தேகமே அக்னி போல சுத்தமடைய அதைப் பாவபுண்ணியங்கள் பற்றாது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"நம்மையிம்மை ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி ஆட பொற்சுண்ணம் இடித்தும் நாமே"

- திருவாசகம்

84. நகோ1 நகோ1 மனா கு3ந்து1 மாயாஜாளீ
கா1ள ஆலா ஜவளீ க்3ராஸாவயா

கா1ளாசீஹே உடீ3 ப1டே3ல பா3 ஜேவ்ஹா
ஸோட3வீனா தே1வ்ஹா மாய பா3ப1

ஸோட3வீனா ராஜா தே3சிஞ்சா சௌத4ரீ
ஆணிக1 ஸோயிரீ ப4லீ ப4லீ

து1காம்ஹணே து1லா ஸோட3வீனா கோ1ணீ
ஏகா1 சக்1ரபா1ணீ வாஞ்சூனியா

'மனமே! இந்த ஸம்ஸாரம் எனும் மாயாஜாலத்தில் சிக்க வேண்டாம். யமன் எந்நேரமும் நம்மை விழுங்கிவிட அருகிலேயே உள்ளான். அந்தக் காலன் வரும்போது தாய் தந்தையராலோ, தேசத்தின் அதிகாரிகளாலோ, ஏன், அரசனால்கூட ஒன்றும் செய்ய இயலாது. உறவினர் எவ்வளவு பெரியவர்களாயினும் அவர்களாலும் ஒன்றும் செய்ய முடியாது. அந்த சக்ரபாணியைத் தவிர உன்னை யாரும் யமனின் பிடியிலிருந்து விடுவிக்க முடியாது" என்கிறார் துகாராம்.

"ஆங்கு வெந்நரகத்தழுந்தும் போதஞ்சேல்
என்றடியேனை யங்கே வந்து தாங்கு"

- பெரிய திருமொழி

85. பை1ல ஆலே ஹரி
சங்க2சக்ர சோபே4 க1ரீ

க3ருட3யேதோ1 ப2ட3த்கா1ரே
நா4பீ நா4பீம் ஹணே த்வரே

முகு3ட குண்ட3லாஞ்ச்யா தீ3ப்தி
தே1ஜே லோப1லே க3ப4ஸ்தி

மேக4ச் யாமவர்ணஹரி
மூர்த்தி டோ3ளஸ ஸாஜிரி

சதுர்பு$^{4}$ஜ வைஜயந்தீ$^{1}$
க$^{3}$ளா மாள ஹேருளதீ$^{1}$

பீதா$^{1}$ம்பர கை$^{1}$ஸே ஜளகே$^{1}$
கை$^{1}$ஸா உஜளல்யா தா$^{3}$ஹீ தி$^{1}$சா

துகா ஜாலாஸே ஸந்து$^{1}$ஷ்ட
க$^{4}$ரா ஆலே வைகுண்ட$^{2}$ பீட$^{2}$

"ஆங்கே சங்கு சக்ரம் சோபிக்க ஸ்ரீஹரி கருடனுடன் படபடக்க, 'பயப்படாதே பயப்படாதே' என்று சொல்லிக் கொண்டு விரைவாக வருகிறான். கிரீட குண்டலங்களின் ஒளி சூரியனையும் மறைக்கிறது. நான்குகைகள், கழுத்தில் வைஜயந்தி மாலை புரள, பத்து திசைகளிலும் ஜொலிக்கும் பீதாம்பரத்தை உடுத்திக் கொண்டு அந்த நீலமேக வண்ணன் ஆடிக் கொண்டு வருகிறான். வைகுண்ட பீடமே வீட்டிற்கு வர மிகவும் திருப்தியடைந்ததாக துகாராம் பாடுகிறார்.

'அஞ்சேல்' என்ன ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே.

- திருவாசகம்

86. மாஜ்யா விடோபாசா கை$^{1}$ஸா ப்ரேம பா$^{4}$வ
ஆப$^{1}$ண சி தே$^{3}$வ ஹோய குரு

ப$^{1}$டி$^{3}$யே தேஹ பா$^{4}$வ பு$^{1}$ரவீ வாஸனா
அந்தீ$^{1}$ தே$^{1}$ ஆபணாபா$^{1}$ஸீ ந்யாவே

மாகே புடே$^{4}$ உபா$^{4}$ ராஹேஸாம்பா$^{4}$ளீத
ஆலியா ஆகா$^{4}$த$^{1}$ நிவாராவே

யோக$^{3}$க்ஷேம த்யாசே ஜாணே ஜட$^{3}$பா$^{4}$ரீ
வாட$^{1}$தா$^{3}$வீ க$^{1}$ரீ த$^{4}$ருனியா

துகாம்ஹணே நாஹீவிஷ்வாஸ ஜ்யாமனீ
பா$^{1}$ஹாவே பு$^{1}$ராணீ விசாருனீ

"என்னுடைய விடோபாவின் ப்ரேம பாவம் எப்பேற்பட்டது! அவனே

இறைவனும் குருவுமாவான். தேகத்தின் உணர்வு விழ, வாஸனைகளைப் பூர்த்தி செய்து கடைசியில் தன்னிடமே அழைத்துக் கொள்வானே! முன்னும் பின்னும் இருந்து நம்மைக் கவனித்துக் கொண்டு, நமக்கு வரும் இன்னல்களைக் களைவானே! நம்முடைய யோக க்ஷேமங்களையெல்லாம் அவனே அறிவான். துன்பம் வருங்கால் கையைப் பிடித்துக் கொண்டு வழியும் காட்டிடுவான். சந்தேகம் உள்ளவர்கள் புராணங்களைப் பார்த்தும், தீர விசாரித்தும் (உண்மையை) அறியுங்கள் என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"நாதன் (குரு) உருவாய் வராவிடில்
ஓர வொண்ணாதே"

- திருமந்திரம்

87. *ஆவடே[3] ஹே ரூப கோ[3]ஜிரே ஸகு[3]ண*
*பாஹதா[1] லோசன ஸுகா[2]வலே*

*ஆதா[1] த்ருஷ்டீ[1] புடே[4] ஐஸாசி தூ[1]ராஹே*
*ஜோ மீ து[1]ஜ பா[1]ஹே பாண்டுரங்கா*

*லாஞ்சாவலே மன லாக[3]லீ கோ[3]டீ[3]*
*தே[1] ஜீவே ந ஸோடீ[3] ஐஸே ஜாலே*

*துகா[1] ம்ஹணே ஆம்ஹீ மாகா[3]வீ லடி[3]வாளீ*
*பு[1]ரவாவீ ஆளீ மாயபா[3]பே[1]*

"இந்த அழகிய ஸகுண உருவத்தைப் பார்க்க கண்கள் இன்பமுற்றன. உன்னைப் பார்க்கும் இக்கோலத்திலேயே பாண்டுரங்கா! என் கண்முன் எப்போதும் இருப்பாயாக. மனதைக் கொள்ளை கொண்டு இன்புறச் செய்த உருவத்தை இந்த ஜீவன் விடலாகாது எனலாயிற்று. தாயும் தந்தையுமாகிய உன்னிடத்தில் செல்லம் கொண்டேன். நான் விரும்பிக் கேட்பவைற்றை எல்லாம் அளிப்பாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"வள்ளல் செய்தடியேனை உனதருளால் வாங்காயே"

- (நம்மாழ்வார்)

88. *யேயீகா[3] விட்டலா யேயீகா[3] விட்டலா*
*ப்[1]ராண ஹா பு[2]ட[1]லா ஆளவிதா[1]*

*படி3யேலோ வனீ தோ2ர சிந்த1வனீ*
*உசீரகா1 அஜுனி லாவியேலா*

*கா1யது1ஜ நாஹீ லெளகி1கா1சீ சங்கா1*
*ஆபுல்யா பா3ளகா1 மோக1லிதா*

*துகாம்ஹணே ப3ஹு க2ந்தீ1 வாடே1 ஜீவா*
*த4ரியேலே தேவா து3ரீ தி3ஸே*

"விட்டலனே வருவாய்! விட்டலனே வருவாயாக! உன்னையே விரும்பி ப்ராணன் மிகவும் வெடித்துவிடும் போலிருக்கிறது. கவலை எனும் பெருங்காட்டில் வீழ்ந்துள்ளேன். இதுவரை (வராமல்) ஏன் நேரம் கடத்துகிறாய்? குழந்தையை விட்டுவிட்டு, 'அது எங்கே போயிற்றோ?' என்று கவலை கொள்ளும் தாய்போல உனக்குக் கவலையொன்றுமில்லையா? கண்ணுக்கு எட்டாத் தூரத்தில் இருக்கிறாயே என்று மனது மிகவும் துன்பமடைகிறது" என்கிறார் துகாராம்.

"தொண்டனேன் உன் கழல் காண, ஒருநாள்
வந்து தோன்றாயே"

– நம்மாழ்வார்

89. *ஸக1ள சிந்தா1மணீ சரீர*
*ஜரீ ஜாய அஹங்கா1ர ஆசா ஸமூள*

*நிந்தா3 ஹிம்ஸா நாஹி க1ப1ட1 தே2ஹ பு3த்தி4*
*நிர்மள ஸ்ப2டி1க1 ஜைஸா*

*மோக்ஷாசே தீர்த்த2 நலகே3 வாராணஸீ*
*யேதீ1 த்யாபா1ஸீ அவ4கீ ஜனே*

*தீர்த்தா2ஸி தீர்த்த2 ஜாலா தோ1சி ஏக1*
*மோக்ஷ தே1ணே தர்சனே*

*மன சுத்த4 த1யாகா1ய க1ரிஸீ மாளா*
*மண்டி3த1 ஸக1ளா பூ4ஷணாஸீ*

ஹரிச்யா கு³ணே க³ர்ஜதா¹ஹே ஸதா³
ஆனந்த த³யா மானஸீ

த¹னமன த¹ன தி³லே புருஷோத்தமா
ஆசா நாஹீ க¹வணாசீ

துகாம்ஹணே தோ¹ பரிஸாஹுனி ஆக³ளா
கா¹ய மஹிமா வர்ணூ த்¹யாசீ

"ஆசையும் அகங்காரமும் முழுவதுமாக நீங்கிய எல்லா சரீரங்களும் சிந்தா மணி போன்றவை (நினைத்ததைக் கொடுக்கும் தேவலோகத்து ரத்தினம்), பிறரை நிந்திப்பது, ஹிம்சை செய்வது, கபட புத்தி இவையெல்லாம் நீங்கிய சுத்த ஸ்படிகம் போல் உள்ளவர்கள் சிந்தாமணி போன்றவர்தான். மோக்ஷத்தை அளிக்கும் வல்லமை பெற்ற எல்லா தீர்த்தங்களும் அவர்களை நோக்கி வருகின்றன. அவர்களும் தீர்த்தங்களின் (அவற்றைப் புனிதப்படுத் தும்) தீர்த்தமாகவே ஆகி (குக்குடமகரிஷியின் கதைபோல), அவர்களைக் காண மோக்ஷம் கிடைக்கிறது. மனது சுத்தமானபின் மாலைகளும் மற்ற அணி களும் அவர்களுக்குத் தேவையில்லை. அவர்கள் எப்போதும் ஸ்ரீஹரியின் குணங்களையே உரக்கச் சொல்லிக் கொண்டு இருப்பவர்கள், மனதில் ஆனந் தம்தான் எப்போதும். எதிலும் ஆசையற்று சரீரம், மனம், தனம், எல்லாவற்றை யும் அந்த புருஷோத்தமனிடம் கொடுத்துவிட்டனர். பரிச வேதிக்ககல்லிற்கும் அப்பாற்பட்ட அவர்களின் மகிமையை என்னவென்று வர்ணிப்பேன்?" என்கி றார் துகாராம் ஸ்வாமிகள்.

90. கா⁴தலே து³ கான தே³தீ³ ஆலியாஸீதா³ன
ஸந்த¹ உதா³ர உதா³ர -ப⁴ரலே அனந்த¹ -பா⁴ண்டா³ர
மாக³த்¹ யாசீ பு¹ரே -த⁴ணீ ஆணீகா¹ஸீ உரே
துகாம்ஹணே போதே¹
தே³வே ப⁴ரலே நவ்ஹேரிதே¹

"ஸாதுக்கள் அருள் ஆனந்தம் முதலியவற்றை ஏராளமாக வைத்துக் கொண் டுகடையை வைத்துள்ளனர். வந்தவர்களுக்கெல்லாம் தானமாகக் கொடுக் கின்றனர். கேட்பவர்களுக்கு அள்ளிக் கொடுத்தும், மற்றவர்களுக்குக் கொடுத் திட நிறைய மீதி வைத்திருக்கின்றனர். இந்த உலகம் எனும் பை நிரம்பியுள் ளது. (இறைவன் எங்கும் எதிலும் நிரம்பியுள்ளான்). இறை அருளால் ஸாதுக் களிடமும் அருள் நிரம்பியிருப்பதால் அதனை வழங்க வழங்கக் குறைவதே

யில்லை என்பதைச் சுட்டிக் காட்டுகிறார் துகாராம் ஸ்வாமிகள்.

91. ஜாணதே1 லே க1ரூ -மாதாலாகே3 து3ரீ த4ரூ
தை1ஸே நக1ரீ க்ருபா1வந்தே1-
பாண்டுரங்கே மாஜே மாதே1

நாஹீ முக்தா1 ப2ளா பே4டீ1 மாகு3தீ1த் யாஜளா
துகாம்ஹணே லோணீ -தா1க1 ஸாண்டீ
நீவடுனீ

"வளர்ந்துவிட்ட குழந்தை தாயை விட்டு தூரத்தில் விளையாடுகிறது. தாயும் எட்டியே இருந்துவிடுவாள். தன்னிடம் வளர்ந்த முத்தை சிப்பி ஜலம் காண விழைவதில்லை மோரானது வெண்ணையைப் பிரித்து விடுகிறது(கடைந்தவுடன்). அவ்வாறு என்னை நீ தள்ளி விடலாகாது என் தாயான பாண்டுரங்கனே!" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

92. ம்ருக3 ஜளா கா1ய க1ராவா உதா1ர
பா1வா வயா பா1ர பை1ல த2டீ3

கா2ப1ராசே ஹோன கே2ளதீ1 லேங்குரே
கோண த்யா வெவ்ஹாரே லா4ப ஹாணீ

மங்க3ள தா3யக1 க1ரிதீ1 குமாரீ
கா1ய த்யாஞ்சீ க2ரீ ஸோயரீக

ஸ்வப்னீசே ஜே ஸுக2 துக்க2 ஜாலே கா1ஹீ
ஜாக்3ருதீ1 தோ1 நாஹீ ஸாச பா4வ

ஸாரீ ஜாலீ மேலீ லடிகே1 வசன
ப3த்த4 முக்த சீணதுகாம்ஹணே

"கானல் நீரை கடக்க என்ன பெரும் முயற்சியா செய்யவேண்டும்? ஓட்டாஞ் சில்லுகளை தங்கக் காசுகளாக வைத்துக் கொண்டு குழந்தைகள் விளையாடுவதில் லாபம் என்ன? நஷ்டம் என்ன? பெண் பிள்ளைகள் கல்யாணம், கார்த்திகை என்று விளையாடுவதில் அவர்களிடம் சொந்த உறவு முறை ஏதாவது வருமா? ஸ்வப்னத்தில் காணும் சுக துக்கங்களெல்லாம் கண் விழித்தவுடன் அவை உண்மையானதல்ல என்று அறிந்தும் இந்த உலகமாய விளையாட்டில்

கட்டுண்டு கஷ்டப்படுகின்றனர்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"ஓடியா இன்பப் பெருமையோன்
உணர்வில் உம்பர் ஒருவனே"

- நம்மாழ்வார்

93. ப்$^1$ரீதீ$^1$சியா போ$^3$லா நாஹீ பே$^1$ஸ பா$^1$ட$^3$
ப$^4$லதஸே கோ$^3$ட$^3$ க$^1$ருனீ கே$^4$யீ

தை$^1$ஸே விட்டல ராயா து$^1$ஜமஜ ஆஹே
ஆவடீ$^3$னே கா$^3$யே நாம து$^1$ஜே

வேடே$^3$ வாங்க$^1$டே$^3$ பா$^3$ளகா$^1$சே போ$^3$ல
க$^1$ரிதீ$^1$ நவல மாய பா$^3$ப$^1$

துகாம்ஹணே து$^1$ஜ யேவோ மாஜீ த$^3$யா
ஜீவீச்யா ஸக$^2$யா ஜீவலகா$^3$

"ஆசையுடன் நான் பாடுவதையெல்லாம் தாள தந்திரங்களுடன் இல்லாதிருப்பினும் உனக்கு ஏற்றவாறு இனிமையாக்கிக் கொள். நமக்குள் இருக்கும் பரஸ்பர அன்புடன், நான் உன் நாமத்தைப் பாடுவதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். குழந்தை தட்டுத் தடுமாறி உளறுவதையெல்லாம் தாய், தந்தையர் அதிசயத்துடன் காண்பது போல எனக்கும் உன்தயை கிடைக்க வேண்டும். என்று உயிர்க்கு உயிரான, நண்பனான, இறைவனை (விட்டலனை) வேண்டுகிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"கோழை மிடருக கவிகோளும் இலவாக
இசைகூடு வகையால் ஏழை அடியார்கள் யாவை சொன சொல்
மகிழும் ஈசன் இடமாம்"

- திருஞான சம்பந்தர்

94. க$^1$ல்ப$^1$ த$^1$ரு ருயா நவ்ஹதீ$^1$ பா$^3$பு$^4$ளா
புரவிதீ$^1$ ப$^2$ளா இச்சீ த$^1$யா

உத$^3$ண்ட$^3$ த்$^1$யா கா$^3$யீ மைஸீ ஆணி சேல்யா
ப$^1$ரித்$^1$யா நிராள்யா கா$^1$மதே$^4$னு

து1கா1ம்ஹணே தே3வ தா3க2வீல த்ருஷ்டி1
த1யா ஸவே பே4டி1 தோ2ர புண்ய

"கற்பக விருக்ஷம் போன்று இலவ மரமோ, வேல மரமோ வேண்டியதைக் கொடுக்க முடியுமா? ஆடு மாடுகள், எருமைகள் எல்லாம் ஒரு காமதேனுவாக முடியுமா? நமக்கு த்ருஷ்டியில் என்னவெல்லாமோ இறைவன் காண்பிக்கின்றான். எனினும் அவனைக் காண்பதுதானே பெரிய புண்ணியம்?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"புயங்கப்பெருமான் பூங்கழல்கள் மிகவே
நினைமின் மிக்கவெல்லாம்வேண்டா
போக விடுமின்கள்"

- திருவாசகம்

95. ப4க3வே த1ரீ ச்வான ஸஹஜ வேஷ த்1யாசா
தே1தே2 அனுப4வாசா காய பந்த2

வாட4வூனீ ஜடா பி1ரே தா3ஹீ தி3சா
த1ரீ ஜம்பூ3 வேஷா ஸஹஜ ஸ்தி2தீ1

கோ1ரோனியா பூமி க1ரிதீ மதீ2 வாஸ
த1ரீ உந்த ராஸ காய வாணீ

துகாம்ஹணே ஐஸே கா1ஸயா கராவே
தே3ஹாஸி த3ண்டா3வே வாவூகே3ஞ்சி

"காவி வஸ்திரத்தை உடுத்திய வேடத்துடன் இருக்கும் நாய்க்கு ஸந்நியாசியின் நெறி முறைகள் அனுபவத்திலேது? ஜடை வளர்த்துக் கொண்டு நரி பத்து திக்கிலும் திரிந்தாலும் அதன் இயற்கையான நிலையில்தானே இருக்கும்? பூமிக்குள் வளையைத் தோண்டி அதன் நடுவில் எலி உட்கார்ந்திருந்தாலும் அது ஏதாவது ஸாதனை செய்வதாகச் சொல்ல முடியுமா? இப்படி வெளி வேஷம் கொண்டு வேஷதாரிகளாக உடலை ஏன் வீணாகக் கஷ்டப்படுத்த வேண்டும்?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்

"ஈனவர் வேடம் கழிப்பித்தல் இன்பமே"

- திருமந்திரம் (1634)

96. மஜ நாஹீ து[1]ஜ்யா ஞானாசீ தே[1] சாட[3]
கே[4]தா[1] வாடே[1] கோ[3]ட[3] நாம து[1]ஜே

நேண தே[1] லேங்க[1]ரு ஆவடி[3]சே தான்ஹே
போ[3]லதோ[1] வசனே ஆவடி[3]னே

ப[4]க்தீ நேணே காஹீ வைராக்[3]ய தே[1] நாஹீ
கா[4]த[1]லா விடாயீ பா[4]ர துஜ

துகாம்ஹணே நாசே நிர்லஜ்ஜ ஹோலூனி
நாஹீ மாஜே மனீது[3]ஜா பா[4]வ

"உன்னுடைய ஞானத்தின் பெருமையை நானறியாதலால் எனக்கு அதில் பிடித்தமில்லை. உன் நாமத்தைச் சொல்ல இனிக்கிறது. நான் உனக்கு ப்ரியமானவனாயினும் அக்ஞானியான சிறு குழந்தை. எனவே, எனக்கு ப்ரியமான உன் நாமத்தைச் சொல்கிறேன். பக்தி என்னவென்று அறியேன். வைராக்யமோ இல்லவேயில்லை. ஹே விடாயீ! உன் மீது பாரத்தைச் சுமத்தியிருக்கிறேன். வெட்கமின்றி உன்னைப் பற்றி ஆடிப்பாடுகிறேன். மற்றபடி வேறொரு உணர்வும் என் மனதில் இல்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"போற்றி யென்றே கைகளாரத் தொழுது சொல்
மாலைகள் ஏற்ற நோற்றேற்கு இனியென்ன
குறை யெழுமையுமே"

- நம்மாழ்வார்

97. மீ யாசக[1] தூ[1] தா[3]தா[1]
கா[1]ய ஸத்[1]ய பா[1]ஹோ ஆதா[1]

ம்யா தோ[1] ப[1]ஸரிலா ஹாத[1]
க[1]ரீ ஆபு[1]லே உசித[1]

ஆம்ஹீ க்[4]யாவே நாம
தும்ஹா ஸமாதா[4]ன கா[1]ம

துகாம்ஹணே தே[3]வராஜா
வாத[3] க[2]ண்டீ[3] து[1]ஜா மாஜா

"நான் பிச்சை ஏற்பவன். நீயோ பெரும் கொடையாளி. இதிலிருந்து உண்மையைப் பார்ப்போமானால் நானோ உன்னிடம் கையேந்தியுள்ளேன். எனக்குக் கொடுப்பதற்கு எது உசிதமோ அதைக் கொடு இறைவா! நான் உன் நாமத்தையே சொல்லுபவன். என் மனம் ஸமாதானமடையச் செய்வது உன் வேலை. அதனால் ஹே தேவராஜனே! நமக்குள் எந்த விவாதமும் வேண்டாம்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"வேண்டி நீ யாதருள் செய்தாய் யானும்
அதுவே வேண்டின் அல்லால் வேண்டும்
பரிசொன்று உண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே"

- *திருவாசகம்*

*98. ஆவடீ3சே தா3ன தே3தோ1 நாராயண*
*பா3ஹே உபா4 ரோன ராஹிலாஸே*

*ஜே ஜயாஸீருசே தே1 க1ரீ ஸமோர*
*ஸர்வக்ஞ உதா3ர மாயபா3ப1*

*டா2யீ ப3டிலியீ தேஞ்சி லாகே3 கா2வே*
*டா2யீ சேஞ்சி க்4யாவே விசாருனி*

*பீ2ஜ பே1ருனியா தேஞ்சி க்4யாவே ப2ள*
*டோ3ர லீஸ கே1ள கை1ஞ்சே லாகே3*

*துகாம்ஹணே தே3வா கா1ஹீ போ3ல நாஹீ*
*து1ஜா தூ1ஞ்சி பா1ஹீ ச1த்ரூ ஸகா2*

"ஸ்ரீமத்நாராயணன் யாருக்கு எவ்வித தானம் வேண்டுமோ அவ்வாறு கொடுத்திடவே நின்று கொண்டிக்கிறான். எல்லாம் அறிந்த, உதார குணம் படைத்த இறைவன் யாருக்கு எதில் ருசி உள்ளதோ அதையே அளிக்கிறான். ஆகையால் நன்கு விசாரணை செய்தே நமக்கு வேண்டியதைப் பெறவேண்டும். கத்திரி விதைத்துவிட்டு வாழையை அடையமுடியுமா? உனக்கு சத்ருவாகவோ, நண்பனாகவோ நீயே உள்ளாய். இறைவனுடைய பேச்சே இதில் இல்லை" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'

- *திருவாசகம்*

*99. இது$^{1}$லே$^{1}$ க$^{1}$ரீ தே$^{3}$வா ஐகே$^{1}$ ஹே வசன*
*ஸமூள அபி$^{1}$மான ஜாளீ மாஜா*

*இது$^{1}$லே க$^{1}$ரீ தே$^{3}$வா ஐகே$^{1}$ ஹே கோ$^{3}$ஷ்டீ$^{1}$*
*ஸர்வ ஸம த்$^{3}$ருஷ்டீ$^{1}$ து$^{1}$ஜ தே$^{3}$கே$^{2}$*

*இது$^{1}$லே க$^{1}$ரீ தே$^{3}$வா வினவிதோ$^{1}$ து$^{1}$ஜ*
*ஸந்த$^{1}$ சரண ரஜ வந்தீ$^{3}$ மாதா$^{2}$*

*இது$^{1}$லே க$^{1}$ரீ தே$^{3}$வா ஐகே$^{1}$ ஹே மாத$^{1}$*
*ஹ்ருத$^{3}$யீ பண்டரீநாத$^{2}$ தி$^{3}$வஸ ராத்ரீ*

*ப$^{4}$ள$^{1}$தியா பா$^{4}$வே தா$^{1}$ரீ பண்டரீநாதா$^{2}$*
*துகாம்ஹணே ஆதா$^{1}$சரண ஆலோ*

"இறைவா! இதைக் கேள். என்னுடைய ஆசை அபிமானங்களையெல்லாம் எரித்துவிடு. இது செய்தால் போதுமானது. உன்னை எல்லாவற்றிலும் நான் காண வேண்டும். ஸாதுக்களுடைய சரண தூளியை நான் தலையால் வணங்கிட வேண்டும். மேலும் கேட்பாயாக -இதயத்தில், பண்டரிநாதனாகிய நீ, இரவும் பகலும் இருக்க வேண்டும். வேண்டியதான, தகுந்த பாவனை கொண்டு, என்னை நீ கரையேற்ற வேண்டி நான் உன்னைச் சரணடைந்துள்ளேன்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"ஏதா மணியே என்றென்றேத்தி இரவும் பகலும் எழிலார் பாதப் போதாய்ந்து அணைவது என்று கொல்லோ என் பொல்லா மணியைப்
புணர்ந்தே"

- *திருவாசகம்*

*100. சுத்த$^{4}$ பீ$^{3}$ஜா போ$^{1}$டீ$^{1}$*
*ப$^{3}$ளே ரஸாள கோ$^{3}$மடீ$^{1}$*

*முகீ$^{3}$ அம்ருதாசீ வாணீ*
*தேஹ வேசாவா கா$^{1}$ரணீ*

*ஸர்வாங்கீ$^{3}$ நிர்மள*

சித்த ஜைஸே க[3]ங்கா[3]ஜள

துகாம்ஹணே ஜாதீ
தாப தர்சனே விஷ்ராந்தீ

"நல்லவிதையாயிருந்தால் (பின்னர் மரமாகி) அதனின்றும் சுவை மிக்க பழங்கள் உண்டாகின்றன. வாயினின்றும் அம்ருதம் போன்று வார்த்தைகள் வெளிவர தேகமோ இறை பணிக்காக உள்ளது. அத்தேகம் தூய்மையாயிருக்க மனமோ கங்கா ஜலம் போன்று நிர்மலமாக, பவித்ரமாக உள்ளது. இவ்வித மனிதர்களைக் காண, ஆசைகள் அகன்று மனதிற்கு அமைதியும் கிடைக்கிறது" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

101. கே[1]வ்ஹா பே[4]டீ[1] தே[3]ஸீ ஜீ[3]வாச்யா ஜீவனா
ஸுகா[2]சா நி தா[4]னா பாண்டுரங்கா

வோஸரலே மன நித்ய வாட[1] பா[1]ஹே
நயனீ நீஜ நயே திவஸ ராத்ரீ

ஆலாஜாதோ[1] தி[1]வஸ மாஸ க[4]டி[1]கா[1] ப[1]ள
ப்ராண ஹா ஜிவ்ஹள து[1] ஜலாகீ[3]

ஹுர ஹுரீ சித்த ஸதா[3] உத்[1]க[1]ன்ட்டி[2]த[1]
ந புரேசி ஹா ஹேத[1] சிந்தாவாடே[1]

கே[1]வ்ஹா யேயீல ஸார்த்[2]தகா[1]சீ வேள
யேஸீ க்ருபா[1]ள தா[4]வோனியா

நிளாம்ஹணே ஆதா நலாவாவா உசீர
பே[4] டோ[1]னீ அந்த[1]ர நிவவாவே

"பாண்டுரங்கனே! சுகத்தின் இருப்பிடமே! உன் உயிருக்கு உயிரானவனை எப்போது காண வருவாய்? ஏங்கும் என் மனம் நிதமும் உன் வரவை எதிர் நோக்குகிறது. இரவு பகலாக தூக்கம் வருவதில்லை. நாள், மாதம், நாழிகை, வினாடி, இப்படியாகப் போய்க் கொண்டிருக்கிறது. ப்ராணன் உன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறது. எப்போதும் மனம் தளும்பிக் கொண்டிருக்க, சித்தமோ வெறிச்சோடியுள்ளது. இவ்வளவெல்லாம் போதாதா? காலம்

எப்போது கூடிவரும் என்று கவலை கொள்கிறேன். க்ருபாகரனே! ஓடிவருவாயாக! தாமதம் செய்யாமல் என்னைக் கண்டு என் மனதைக் குளிர்விப்பாயாக" என்கிறார் நிளா. (இவர் துகாராமின் சீடர்களில் ஒருவர்)

"காண வாராய் என்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து அடியேன் காணி நன்னாட் டலமந்தால் இரங்கியொரு நாள் நீ யந்தோ காண வாராய்"

- *நம்மாழ்வார்*

*102. ஹாசி நேம ஆதா¹(ம்) நபீ ரே மாகா⁴ரீ*
*பை³ஸலே சேஜாரீ கோவிந்தாசே*

*க⁴ரிகீ⁴ ஜாலே ப¹ட்¹ட¹ராணீ ப³ளே*
*வரிலே ஸாவளே பரப்ரம்ம*

*பா³ளியாசா அங்க³ ஸங்க³ ஜாலா ஆதா¹(ம்)*
*நாஹீ ப⁴ய சிந்தா¹ துகாம்ஹணே*

"கோவிந்தனுடைய அருகிலேயே அமர்ந்திருப்பதுதான் என் நியமம். இதனின்று நான் பின் செல்லமாட்டேன். கோவிந்தனின் இல்லத்திற்குச் சென்று அந்த நீல நிறம் கொண்ட ப்ரம்ம ஸ்வரூபியுடன் பட்டத்தரசி போல் இருந்து அவனுடன் உறவாடிக் கொண்டிருக்க பயமேது? கவலையேது?" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

"என்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க! கங்குல் பகல் எங்கண் மற்றொன்றுங் காணற்க!
இங்கிப்பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எக்கேலோ ரெம்பாவாய்"

- *திருவாசகம்*

*103. அகா³ கருணாக¹ரா கரிதஸே தா⁴வா*
*யாமஜ ஸோடவா லவக¹ரீ*

*ஐகோ¹னியா மாஜீ கருணேசீ வசனே*
*வ்ஹாவே நாராயண உதா¹வீள*

*மாகே³ பு¹டே⁴ அவகா⁴ திஸே ரிதா¹டா²வ*
*டே²வூனி பா⁴யீ பா⁴வ வாட¹ பா¹ஹே*

உசீரதோ1 ஆதா1 ந பா1ஹிஜே கே1லா
அஹோ ஜீ விட்டலா மாய பா3பா1

உரலே தே1 ஏக1 ஹேஞ்சீ மஜ ஆதா1(ம்)
அவகே4 வி சாரிதா1 சூன்ய ஜாலே

துகாம்ஹணே ஆதாக1 ரீ க்ருபா தா3ன
பா1 உலே ஸமானதா3வீ டோ3ளா(ம்)

"ஏ கருணாகரனே! என்னிடம் வந்து என்னை (துன்பங்களினின்று) சீக்கிரம் விடுவிப்பாயாக என்று விண்ணப்பிக்கிறேன். என்னுடைய இந்தக் கருணை வேண்டிடும் சொற்களைக் கேட்டு, நாராயணா! நீ கருணை பொங்கி வந்திட வேண்டும். என்னைச் சுற்றி எல்லாமே வெறிச்சோடியிருக்கிறது. உன் காலடியில் என் சிந்தனையை வைத்து உன் வரவை எதிர்பார்க்கிறேன். (என்னுடைய தாயும் தந்தையுமான விட்டலனே!) நீ இவ்விஷயத்தில் தாமதம் செய்ய வேண்டாம்.

உன்னைக் காண வேண்டும் என்பதான ஆசைதான் இப்போது மிஞ்சியுள்ளது. மற்றவையெல்லாம் மறைந்துவிட்டன. ஆகையால் உனது திருவடிகளின் தரிசனத்தை க்ருபையுடன் அளித்திடுவாயாக" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

" விருப்பொடு நமக்குத்தேவ நற்செறிகழல்
தாளினை காட்டாய்"

– திருவாசகம்

104. மாயே மோக1லிலே கோ1டே2 ஜாவே பா3ளே
ஆபு1லியா ப3ளே ந வஞ்சே தே1
ருஸோனியா ப3ளே ஸான்டோ3னி''' தா1ட1
மாகே3 பாஹே வாட1 யாவே ஐஸீ

பா4ண்ட3வல ஆம்ஹா ஆளீ க1ராவீஹே
ஆப1ணசி மாகே3 தா4வஸீல
துகாம்ஹணே ஆளீ க1ருனியா நிகீ
தே3ஸீல பா4துகீ பு3ஜா ஊனீ

"தாய் வீட்டுவிட்டால் குழந்தை எங்கே செல்லும்? அதனால் தன்னுடைய

பலத்தைக் கொண்டு பிழைக்க முடியாதே? கோபத்தில் தட்டை எறிந்துவிட்டு ஓடும் குழந்தை தாய் பின்னால் வருவாள் என்றுதானே எதிர்பார்க்கின்றது? என் சொத்து தனம் எல்லாம் நீயே! நீதான் என் பின் வந்து என்னைக் காக்க வேண்டும். தோளோடு தோளாக நின்று சிறந்தவற்றையெல்லாம் அளிக்க வேண்டும்" என்கிறார் துகாராம் ஸ்வாமிகள்.

# நாமதேவர் அபங்கங்கள்

1. *ஆலா வனமாளீ மக$^{4}$ பே$^{4}$டதீ ஸக$^{1}$ளீ*
*யசோதா ரோஹிணீ போடீ$^{1}$ த$^{4}$ரீ சக்ரபாணீ*
*கா$^{3}$யீ தா$^{4}$வதா$^{1}$தி$^{1}$ -க்ருஷ்ண அங்கா$^{3}$தே சாடி$^{1}$தீ$^{1}$*
*உட$^{3}$யா மாரீ தா$^{1}$தீ$^{1}$ -க$^{3}$டீ$^{3}$ ஆனந்தே$^{3}$ நாச$^{1}$தீ*
*நவர்ண வே தோ$^{1}$ ஆனந்த -நாமயாசீ புத்தி மந்த$^{3}$*

"வனமாலை சூடிவருகிறான் (கண்ணன்). எல்லோரும் அவனைக்காணக் கூடியுள்ளனர். அந்த சக்ரபாணியை யசோதையும், ரோஹிணியும் அணைத்துக் கொண்டு வருகிறார்கள். ஆவினம் ஓடிவந்து கண்ணனின் உடலை நாவினால் தீண்டுகிறது. (நதிக்கரையில்) இடைச் சிறுவர்கள் தண்ணீரில் குதித்து விளையாடுகிறார்கள். அங்கு நிலவும் ஆனந்தத்தை வர்ணிக்க இயலாது -என் மந்த புத்தியால்" என்கிறார் நாம தேவர்.

"குழல்களும் கீதமுமாகி யெங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு.... உள்ளம் விட்டூண் மறந்தொழிந்தனரே"

- *பெரியாழ்வார்*

2. *கிதீ தே$^{3}$வா துஜா யேவூ கா$^{1}$கூ$^{1}$ள$^{1}$தீ*
*கா$^{1}$ய யா சஞ்சிதீ லிஹிலே மாஜ்யா*

*கா$^{1}$ஹோ மாஜீ ஸாண்ட$^{3}$ கே$^{1}$லீ ஹ்ருஷீகே$^{1}$ சீ*
*ஆம்ஹீ கோ$^{1}$ணாபாசீ தோண்ட$^{3}$ வாஸோ*

*ப்$^{3}$ரீதா$^{3}$சா தோ$^{1}$ட$^{3}$ர க$^{3}$ர்ஜே த்$^{1}$ரிபு$^{4}$வனீ*
*தூ$^{1}$ஞ்சீ ஏக$^{1}$ த$^{4}$ணீ த்$^{1}$ரை லோக்யாசா*

*ஸமூள கே$^{4}$த$^{1}$லா ப்ரு$^{2}$த்வீசா பா$^{4}$ர*
*மாஜாசி ஜெ$^{3}$ளஞ்ஜார கா$^{1}$ய துலா*

நகோ பாஹூ அந்த$^{1}$ பாண்டுரங்கே ஆயீ
நாமா ஹரீ பா$^{1}$யீ கா$^{4}$லீ மிடீ

"நான் உன்னிடம் எவ்வளவுதான் புலம்புவேன்? என் பாப வினைதான் எவ்வாறு எழுதப்பட்டுள்ளது? ஹே ரிஷிகேசா' என்னை ஏன் கைவிட்டாய்? யாரிடம் இதைச் சொல்லிடுவேன்? மூவுலகிலும் உன் புகழ் பரவியுள்ளது. நீதானே மூவுலகத்திற்கும் எஜமானனாவாய்? இந்த பூபாரத்தையே நீ சுமக்கும்போது நான் உனக்கு ஒரு சுமையா என்ன? தாயான பாண்டுரங்கா! என்னைச் சோதிக்காதே" என்று விட்டலனின் கால்களைத் தழுவுகிறார் நாமதேவர்.

"த்ரை லோக்ய பாஸிதா உபகளா நாஹீ
ஆமசேத்யா காயீ அஸே ஓஜே"

- துகாராம்

3. மாஜாபா$^{4}$வ து$^{1}$ஜே சரணீ
துஜே ரூப$^{1}$ மாஜே நயனீ

ஸாம்பட$^{1}$ லோ ஏகா$^{1}$மேகா$^{1}$
ஜன்மோ ஜன்மீ நோஹே ஸுட$^{1}$கா$^{1}$

த்வா(ம்) தோ$^{3}$டிலீ மாஜீ மாயா
மீதோ ஜட$^{3}$லோ துஜ்யா பா$^{1}$யா

த்வாம் மஜ மோக$^{1}$லிலே விதே$^{3}$ஹீ
ம்யா து$^{1}$ஜ கா$^{4}$தலே ஹ்ருதயீ

நாமாம்ஹணே பா$^{3}$ ஸஜாணா
ஸாங்க$^{3}$ த்வா(ம்) ந ட$^{2}$கவிலே பே$^{1}$ணா

"எந்தன் உணர்வுகளெல்லாம் உந்தன் காலடியில். உன் உருவம் எந்தன் கண்களிலே. ஒருவரிடம் ஒருவர் அகப்பட்டோம் எப்பிறவியிலும் இது விடுபடாது. என்னிடம் மாயையை அறுத்தாய். உந்தன் காலடிகளில் யான் வீழ்ந்தேன். இந்த சரீரத்திலிருந்து என்னை விடுவித்தாய். நானோ உன்னை என் இதயத்தில் இருத்தினேன். அப்பா, விட்டலா! உன்னிடம் யார்தான் மயங்கவில்லை சொல்!" என்கிறார் நாமதேவர்.

"உன்னைக் கொண் டென்னுள் வைத்தேன்
என்னையும் உன்னிலிட்டேன்"

-பெரியாழ்வார்

4. மாஜீ கோ1ண க3தீ ஸாங்கா3 பண்டரீநாதா
தா1ரீஸீ அனாதா2 கே1வ்ஹா மஜ

மனா பா1ஸூ னீயா ஸாங்கா3 மஜ1 ப்ரதீ
பு1ஸே கா1கு1ளதீ ஜீவாசியா

ந போ3லஸீ காரே த4ரீலா அபோ3லா
கோ1ணாஸீ விட்டலா சரண ஜாவூ

கோ1ணாஸீ ஸாங்க1டே3 கா4லாவே ஹே ஸாங்க3
நகோ1 த4ரு ராக3 தீ3னாவரீ

பா3லகா1ஸீ ஜைஸீ ஏக1சீ தே1 மாயா
தைஸே துஜே பா1ய மஜலாகீ

நாமாம்ஹணே தே3வா அனாதா2ச்யா நாதா2
க்ருபாளுவா கா1ந்தா1 ரகுமாயீச்யா

"என் கதிதான் என்ன? அநாதையான என்னை எப்போது கரையேற்றுவாய்? சொல். பண்டரீநாதா' (இந்த ஜீவனின் புலம்பலைக் கேட்டு) என் விஷயமாக மனதில் நினைப்பதைச் சொல். ஏன் பேசாமல் மௌனம் சாதிக்கிறாய்? யாரை சரணடைவேன்? என்னை ஏதாவது துயரத்தில் இடப்போகிறாயா? இந்த எளியவன் மீது கோபிக்காதே! ரகுமா தேவியின் மணாளனே! திக்கற்றவரின் நாதனே! க்ருபாகரனே! குழந்தைக்கு எப்படி தாயார்தான் எல்லாமே ஆவாளோ அவ்விதம் தான் உனது காலடிகள் எனக்கு எல்லாமாகும்" என்கிறார் நாமதேவர்.

"என்னை நோக்குவார் யாரே என்நான் செய்கேன்?
எம்பெருமான் பொன்னே திகழுந்திருமேனி எந்தாய் எங்குப்புகுவேனே"

- திருவாசகம்

5. பீமாதீ4ரீ ஸாங்கே3 ஸாரஜேஸீ ஹரீ
பை3ஸ ஜிவ்ஹேவரீ நாமயாச்யா

லடீ4வாள மாஜா நாமா பா3ள தா1ன்ஹே
மஜவீண ஆஹே கோ1ண த்1யாஸீ

மஜவரீ த்1யாசே பா2ர ஆஹே ரீண
எவட்4யானே உத்1தீ1ர்ண ஹோயீனமீ

நாமாம்ஹணே அங்கே3 பாந்தோ4னியா வஹ்யா
பை3ஸே ல்யாஹாவயா பாண்டுரங்க

'பீமா நதிக்கரையில் இருக்கும் ஸ்ரீ ஹரியானவர் ஸரஸ்வதி தேவியைப் பார்த்து, நாமதேவரின் நாக்கில் அமரும்படி கூறினார். 'என் செல்லமான அவன் சிறு பாலகன். என்னைத்தவிர அவனுக்கு யார் உளர்? அவனுக்கு நான் மிகவும் கடன்பட்டுள்ளேன். இப்போது அதனின்று விடுபடுவேன்' என்று சொல்லி தன் உடைகளைச் சரி செய்துகொண்டு (நாமதேவரின் பாடல்களை) எழுத உட்கார்ந்தாராம் -சொல்கிறார் நாமதேவர்.

"பேரேயுறை நின்ற பிரான் இன்று வந்து பேரேன் என்றென் நெஞ்சு நிறையப் புகுந் தன்"

- நம்மாழ்வார்

6. அவகே4 நிரந்த1ர க1ரா ஹா விசார
ப4வஸிந்தூ4சா பா1ர த1ரிஜே கே1வீ

அவகே4 ஜன்ம வாயா கே3லே விஷயா ஸங்கே3
சிணலே தீ வாவுகே3 மாயா மோஹே"

அவகா4 வேள க1ரா ஸம்ஸாராசா த4ந்தா3
ப1ரீவாசே வதா ஹரிசே நாம

அவகே4 பா4வே ஏகே1 விட்டலா தே1 பஜா
ஆதே1 க1ரா பூஜா ஹரி தா3ஸாஞ்சீ

நாமாம்ஹணே அபகே4 அனுப4வூனீ பா1ஹா
ஸர்வ கா1ள ராஹா ஸா4து ஸங்கே3

"இந்த ஸம்ஸாரக் கடலை எவ்விதம் கடப்போம் என்று எப்போதும் விசா

ரணை செய்து கொண்டேயிருங்கள். மாய வலையில் வீழ்ந்து சரீர போக விஷயங்களிலேயே ஈடுபட்டு, பிறவிகள் பயனற்றதாய்ப் போயினவே! இல்வாழ்க்கையின் கடமைகளைச் செய்யும்போது ஸ்ரீஹரியின் நாமத்தையும் உச்சரியுங்கள். பாவ பூர்ணமாக விட்டலனையும், ஹரிதாஸர்களையும் பூஜியுங்கள். எக்காலத்திலும் ஸாதுக்களின் கூட்டத்தில் இருந்து எல்லாவற்றையும் அனுபவித்துப் பாருங்கள்" என்கிறார் நாமதேவர்.
(ஜீவன் அடையும் சுகத்தை அனுபவியுங்கள்)

"எம்மானுக்கே காதல் செய் தொண்டர்க்
கெப்பிறப்பிலும் காதல் செய்யுமென்னெஞ்சமே"

-குலசேகரப்பெருமாள்

7. *த்ரிவித4 தா1பே ப்ராணீ ஹோதா1த ஸந்த1ப்த*
*சீத1ள க1ரீத கதா2ம்ருதே1*

*அம்ருதா ப1ரீஸ துஜி கதா2 அதி1க*
*ஸாங்க3தஸே ஐக தே3வராயா*

*ஸ்வர்கீ3சே அம்ருத ப்1ராசன க1ரீதீ*
*புண்ய ஸரல்யா யேதீ1 ம்ருத்1யு லோகா1*

*துஜீ கதா2 தே3த1 அச்யுத1 பதா3ஸீ*
*ந விசாரீ மானஸீ யாதீ1 கா1ஹீ*

*நாஹீ சது1ராயீ போ3ப்3டே ஹே போ3ல*
*லிஹீத விட்டல நாமாம்ஹணே*

"தகிக்கும் மூன்றுவித தாபங்களால் (அத்யாத்மிக, ஆதி தைவிக, ஆதி பௌதிக) துன்பப்படும் ஜீவனை ஹரி கதை எனும் அமிர்தமானது குளிர்விக்கிறது. தேவனே! உந்தன் சரித்திரம் அம்ருதத்தைக் காட்டிலும் சிறந்தது. அம்ருதம் உண்டு ஸ்வர்கத்தில் உள்ளவர் செய்த புண்ணியம் தீர்ந்துவிட மீண்டும் இந்தம்ருத்யு லோகமான பூவுலகுக்கு வரவேண்டியவர்கள்தான். குலம், கோத்திரம் ஒன்றையும் விசாரியாமல் அழிவில்லா நிலையை உன்னுடைய ஹரி கதை அளிக்க வல்லது. இவ்வாறு (நான்) கூறுவதெல்லாம் என்னுடைய சாமர்த்தியத்தால் அல்ல -விட்டலனே எழுதுவதுதான் இவையெல்லாம்" என்கிறார் நாமதேவர்.

"கணை நாணில் ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்
சீரை நன்னஞ்சே ஓவாத ஊனாக உண்"

— நம்மாழ்வார் (பெரிய திருவந்தாதி)

8. அவகீ4 சித்த1 வருத்தி1 ஏக1 வடு1ன ஜேணே
அவகா4 த்4ரிலா மனே பாண்டுரங்க

அவகே4 ஸுக3 ஏக1 தயாஸீ பா1வலே
அவகே4 ஸப2ள ஜாலே ஜன்மத்1யாசே

அவகீ4 வ்ரதே1 தா3னே கே1லீ பை த1யானே
ஜயாசே விட்டலீ மன ஜட3லே

நித்ய விட்டல நாம க3ர்ஜதீ ஸப்1ரேம
அவகே4 நித்ய நேமே ஜாலே த்1யாசே

அவகே4 இஷ்ட மித்ர ப3ந்து மாதா பிதா
கே1லா ஆவட3தா1 பாண்டுரங்கா

நாமாம்ஹணே ஜஸே அவகே4 ஸம்ப்ரதாய
மீளோனீ த4ரீ பாய விடோபாசே

"எல்லா மன ஓட்டங்களையும் ஒன்றுபடுத்தி எப்போதும் பாண்டுரங்க்கனையே பற்றியிருந்தால் எல்லா சுகங்களும், பிறவிப் பயனும் ஒருவருக்குக் கிடைக்கின்றன. விட்டனிடம் மனத்தைப் பறி கொடுத்தவன் எல்லாவித விரத் தானங்களைச் செய்தவனாகிறான். ப்ரேமையுடன் நிதமும் விட்டல நாமத்தை கர்ஜிப்பவன் நித்ய நியமங்களைச் செய்தவனாகிறான். தாய் தந்தையர் இஷ்ட மித்ர பந்துக்கள் எல்லோருக்கும் ப்ரியமானவனாகிறான். விட்டலின் காலடியை பற்றியவன் இவ்வாறு எல்லாவித சம்பிரதாய நேம நிஷ்டை செயல்க்ளைச் செய்பவனாக உள்ளான்" என்கிறார் நாமதேவர்.

"புயங்கப் பெருமான் பூங்கழல்கள் மிகவே நினைமின், மிக்கவெல்லாம் வேண்டா போக விடுமின்கள்..."

- திருவாசகம்

9. அவகே4 தே1 தை3வாசே விட்டல ம்ஹணதீ வாசே
அவகே4 கு1ல த்யாஞ்சே புண்ய வந்த

*அவகே4சீ ஸம்ஸாரீ ஜாணாவே தே1 த4ன்ய*
*ஜயாசே ப்1ரேம பூ1ர்ண பாண்டுரங்கீ*

*அவகா4 விட்டல போ4கிதீ தினரா1தீ*
*வோளகே3 கி1ங்க1ர விருத்1தி நாமா த்1யாந்தே1*

“தைவ வசத்தால் எல்லோரும் விட்டலனை நாவில் ஏற்றால் அவர்களின் குலமே புண்யம் செய்ததுதான். பாண்டுரங்கனிடம் முழு ப்ரேமையைக் கொண்டவர்களின் இல்லங்களில் உள்ளோரெல்லோரும் பேறு பெற்றவர்களே! இரவு பகலாக விட்டலனையேப் பாடி அனுபவிப்பவர்களுக்கு சேவை செய்வதான வேலையை மேற்கொள்வேன்” என்கிறார் நாமதேவர்.

“திரு நாரணன் தொண்டர் தொண்டர் கண்டீர் இடையார் பிறப்பிடைதோ றெமக்கெம் பெருமக்களே”

*- நம்மாழ்வார்*

10. *ஸர்வ ஸாவதா4ன ஹோவுனீ விசார*
*ஸோட3வண க1ரா ஸம்ஸாராசீ*

*அவகே4 ஆயுஷ்ய ஸரோனி ஜாயீல*
*கோ1ண தே1 ஹோயீல ஸாஹ்ய ஆம்ஹா*

*ஸகள ஸம்ஸார ஜாணோனி லடி1கா1*
*சரண ஜா ஏகா1 விடோபாஸீ*

*ஸர்வகா1ள வாசே ம்ஹணா நாராயண*
*வாயா ஏக1 க்ஷண ஜாவோ நே1தீ*

*நாமம்ஹணே ஸர்வ ஸுக2சீ ஹோயீல*
*மன ஹே டேவால ஹரீ பாயீ*

“எல்லாவற்றிலும் எச்சரிக்கையுடன் தீவிர விசாரணை செய்து இந்த இல்வாழ்க்கையின்பால் கொண்ட ஈடுபாட்டை விடுங்கள். ஆயுட்காலம் முடியும் போது யார்தான் நம் துணைக்கு வருவார்? இந்த இல்வாழ்க்கை பொய்யெனக் கருதி விட்டலனை சரணடையுங்கள். ஒரு க்ஷணமும் வீண் செய்யாமல் ஸ்ரீமந் நாராயணனின் நாமத்தை எப்போதும் நாவில் உச்சரித்துக் கொண்டிருங்கள்.

மனதினை ஸ்ரீ ஹரியின் காலடியில் வைப்பீராகில் எல்லா இன்பமும் ஏற்படும்" என்கிறார் நாமதேவர்.

"ஐயனே, அரனேயென்று அரற்றினால்
உய்யலாம் உலகத்தவர்"

- திருநாவுக்கரசர்

11. ஸந்த ஸங்க$^{3}$தீ$^{1}$சே கா$^{1}$ய ஸாங்கூ$^{3}$ ஸுக
ஆப$^{1}$ணா பாரிக$^{2}$ நாஹீ ஜேதே$^{2}$

ஸாது$^{4}$ தோ$^{2}$ரஜாணா ஸாது$^{4}$ தோ$^{2}$ர ஜாணா
ஸாது$^{4}$ தோ$^{2}$ரஜாணா கலியுகீ

இஹலோகீ தே$^{1}$ச ஸர்வாபூ$^{4}$தீ ஸம
சரீராசே காம நாஹீ த$^{1}$யா

நாமாம்ஹணே ஜாய தூ$^{3}$த$^{4}$ ஏகஸர
ஸாது$^{4}$ நிரந்தர தை$^{1}$ஸா ராஹே

"ஸத்ஸங்கத்தினால் ஏற்படும் விலை மதிக்க முடியாத சுகத்தின் பெருமையை என்னவென்று சொல்ல! கலியுகத்தில் இந்த ஸாதுக்கள்தான் பெரியவர்கள், உயர்ந்தவர்கள். இவ்வுலகிலுள்ள எல்லா உயிர்களையும் சமமாக பாவிப்பவர்கள். சரீர போக விஷயங்களுக்கு அங்கு இடமில்லை (வேலையில்லை). எந்த நிறமான பசுவின் பாலாயினும் அது எவ்விதம் வெண்மையாகவும் பவித்ரமாகவும் உள்ளதோ அவ்வாறே எல்லா ஸாதுக்களும் தூய்மையாக சுகத்தையளிப்பவர்களாகவே உள்ளனர்" என்கிறார் நாமதேர்.

'எல்லார் உள்ளத்திலும் இறைவன் இருக்கிறார். ஆனால் பக்தன் ஒருவன் நல்லாரோடு மட்டும் இணக்கம் கொள்ளவேண்டும்.'

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

12. வத$^{3}$னீ து$^{1}$ஜே நாம அம்ருத ஸஞ்ஜீவனீ
அஸதா$^{1}$ சக்ரபாணீ ப$^{4}$ய க$^{1}$வண

யாஜன்ம மரணாசீ கா$^{1}$யஸீ மக$^{3}$ சிந்தா
துஜியா சரணாகதா பண்டரீ நாதா

*ஹ்ருதயீ து1ஜே ரூப பி1ம்ப3லே ஸாசாரா*
*தேதே கவண பார ஸம்ஸாராசா*

*நாமாம்ஹணே து1ஜே நாம வேளோ வேள*
*ம்ஹணதா களிகாள பா1யா ப1டே3*

"சக்ரபாணியே! அம்ருத ஸஞ்ஜீவினியாக உன் நாமம் வாயில் இருக்க என்ன பயம்? பண்டரீநாதனே! உன்னைச் சரணமடைந்தவனுக்கு இந்த ஜன்ம மரணம் பற்றியதான கவலைதான் எதற்கு? இதயத்தில் உந்தன் உருவம் நன்கு பிரதிபலிக்க, இந்த ஸம்ஸாரத்தின் சுமைதான் என்ன? உன்னுடைய நாமத்தை வேளை தோறும் சொல்லிட கலி காலம் காலில் வந்து விழும்" என்கிறார் நாம தேவர்.

"வினையால் அடர்ப்படார், வெந்நரகில் சேரார்
ஆயிரம் பேர்ச் செங்கட் கரியானைக் கைதொழுதக்கால்"

- *முதல் திருவந்தாதி*

13. *மாஜே மனோரத2 பூர்ண கீ1ஜே தே3வா*
*கேசவா, மாதவா நாராயணா*

*நாஹீ நாஹீ மஜ ஆணிக1 ஸோயரா*
*நகரீ அவ்ஹேரா பாண்டுரங்கா*

*அனாதா2சா நாத2 ஹோசீ தூ1 த3யாளா*
*கி1தீ வே1ளோ வேளா ப்ரார்தூ2 ஆதா1*

*நாமாம்ஹணே ஜீவ ஹோதோ1 கா1ஸாவீஸ*
*கே1லீ து1ஜீ ஆஸ ஆதா1(ம்)வரீ*

"கேசவா! மாதவா! நாராயணா! என்னுடைய மனோரதத்தை நிறைவேற்ற வேண்டும். இறைவா! எனக்குத் துணை வேறொருவருமில்லை. (ஆகையால்) நீயும் என்னை உதாஸீனம் செய்யலாகாது, ஹே பாண்டுரங்கா! திக்கற்றவர்களுக்கு நாதனாகிய தயாளனே! எவ்வளவு முறைதான் நான் உன்னை வேண்டிடுவேன்? உன்மீது ஆசை கொண்ட இந்த ஜீவன் இப்போது கலக்க முறுகிறது" என்கிறார் நாமதேவர்.

"அடியேன் நான், உடையானே உனையல்லா

துறு துணை மற்றறியேனே"

- திருவாசகம்

14. விட்டல ஆவடீ3 ப்ரேம பா4வோ
விட்டல நாமாசா ரே டா1ஹோ
துடலா ஹா ஸந்தேஹோ

ப்4வ மூள வ்யாதீ சா
ம்ஹணா நரஹரி உச்சார

க்ருஷ்ணஹரி ஸ்ரீதர
ஹேஞ்சி நாம ஆம்ஹா ஸார
ஸம்ஸார த1ராவயா

ஏகதத்வ த்ரிபு4வனீ
ஹேஞ்சீ ஆம்ஹா ஹரிப1ர்வணீ
ஜே கா3யி ஜே புராணீ
வேத சாஸ்த்ரா ஸஹித

நேகோ4 நாமாவிண கா1ஹீ
விட்டல கிருஷ்ண லவலாஹீ
நாமாம்ஹணே த1ரலோ பா1ஹீ
விட்டல விட்டல ம்ஹணதாஞ்சீ

"மனதினில் விட்டலனிடம் ப்ரேமை கொண்டு, விட்டல நாமத்தை நிலைநிறுத்திட இவ்வாழ்வின் மும்மலங்களும் ஸந்தேகமன்றி அறுபடுகின்றன. நரஹரியே, க்ருஷ்ணா, ஹரி, ஸ்ரீதரா என்று நாமங்களை உச்சரித்துக் கொண்டிருப்பதில்தான் இந்த ஸம்ஸாரத்தை கடக்கும் ஸாரம் அடங்கியுள்ளது. மூவுலகத்திற்கும் ஒரே தத்துவமாக விளங்கும் ஸ்ரீ ஹரியைப் பாடும் காலம்தான் சுபபர்வ காலங்களிலெல்லாம் சுபமானது என்று வேத சாஸ்திரங்கள் கூறுகின்றன. விட்டலா, விட்டலா, கிருஷ்ணா என்று சொல்லிக் கொண்டு நான் கரையேறுவதைப் பார்ப்பீர்" என்கிறார் நாமதேவர்.

"உற்றேன் உகந்து பணி செய்துன பாதம் பெற்றேன்
ஈதேயின்னம் வேண்டுவ தெந்தாய்!"

- நம்மாழ்வார்

15. ஜன்மோ ஜன்மீ ஆம்ஹீ ப$^{3}$ஹு புண்ய கே$^{1}$லே
தே$^{1}$வ்ஹா யா விட்டலே க்ருபாகேலீ

ஜன்மோனீ ஸம்ஸாரீ ஜாலோ த்யாசா தா$^{3}$ஸ
மாஜா தோ$^{1}$ விஷ்வாஸ பாண்டுரங்கீ

அனேக தை$^{3}$வதாம்) நேகே$^{4}$ மாஜே சித்த
கோ$^{3}$ட$^{3}$ கா$^{3}$தா$^{1}$ கீ$^{3}$த விடோபாசே

ப்$^{4}$ரமர ஸுவாஸீ மதாவரீ மாஸீ
தைஸே யா தேவாஸீ மாஜே மன

நாமாம்ஹணே மஜ பண்டரீஸ ந்யா ரே
ஹட$^{3}$ ஸோனீ த்யாரே விடோ பாஸீ

"பல ஜன்மங்களில் செய்த பெரும் புண்யவசத்தால் விட்டலன் க்ருபை செய்தான். இப்பிறவியில் ஸம்ஸாரியாய் விட்டலனின் அடிமையானேன். அவனிடம் பக்தி பூண்டுள்ளேன். பல தெய்வங்களை அண்டாமல் விட்டலனைப் பாடுவதிலேயே சித்தம் இனிமை கொள்கிறது. நறுமணத்தை நுகரும் வண்டு போலவும், தேனின் மீது ஈ உட்கார்ந்திருப்பது போலவும் என் மனதானது விட்டலனையே மொய்க்கிறது.

என்னை பண்டரீபுரத்திற்கு இட்டுச் செல்லுங்கள். என்னை நன்றாகக் கட்டி விட்டலனிடம் கொடுத்துவிடுங்கள்" என்கிறார் நாமதேவர்.

"ஒண்டாமரையாள் கேள்வன் ஒருவனையே
நோக்கும் உணர்வு"

\- பொய்கையாழ்வார்

16. ஆஷாடீ கார்த்திகீ விஸரு நகா மஜ
ஸாங்க$^{3}$த$^{1}$ஸே குஜ பாண்டுரங்க

பதி தபாவனா மீதோ ஆஹே க$^{2}$ரா
து$^{1}$மசேனீ ப$^{3}$ரா தி$^{1}$ஸதஸே

தும்ஹீ ஜாதா காவாஹுரஹுர மாஜே ஜீவா
பே$^{4}$டே$^{1}$ல கேத$^{4}$வா மஜலாகீ

*தா[4]வோனியா தேவ க[3]ளா கா[3]ளீ மிடீ[2]*
*ஸ்பு[4]ந்த[3] ஸ்புந்தூன கோஷ்டி போ[3]லதஸே*

*தின்ஹீ த்ரிபு[4]வனீ மஜ நாஹீ கோ[1]ணீ*
*ம்ஹணே சக்ரபாணி நாமயாஸீ*

"ஆஷாட கார்த்திகை மாத விசேஷத்தை மறந்துவிடாதே' என்கிறார் பாண்டுரங்கன். மேலும் அவன் சொல்கிறான். 'நான் பதீத பாவனன் என்பது உண்மைதான். அது உன்னால் நன்கு வெளிப்படுகிறது. நீ ஊருக்குச் சென்றுவிட வெறிச்சோடியதாக உள்ளது என் மனம். என்னை எப்போது மீண்டும் சந்திப்பாய்?' என்று சொல்லி ஓடிவந்து என் கழுத்தைக் கெட்டியாக அணைத்துக் கொண்டு, தேம்பித் தேம்பி, இந்த மூவுலகத்திலும் உன்னையன்றி எனக்கு வேறொருவருமில்லை என்று சொன்னார் சக்ரபாணீ" என்கிறார் நாமதேவர்.

"மலரடியினை காட்டி அப்பன் என்னை வந்தாண்டு கொண்டருளிய அற்புதம் அறியேனே"

- *திருவாசகம்*

17. *விட்டல மாவுலீ க்ருபே[1]சீ கோ[1]வளீ*
*ஆட[2]விதா கா[4]ளீ ப்ரேம பா[1]ன்ஹா*

*மஜ கா[1] மோ[1]கலிலே க[1]வணா நிரவிலே*
*கடி[1]ண கைஸே ஜாலே ஹ்ருதய துஜே*

*து[1]ஜவீண ஜிவலக[3] து[3]ஜே கோ[1]ண ஹோயீல*
*தே மாஜே ஸாஹில ஜட[3] பா[4]ரீ*

*தூமாஜீ மாவுலீ மீ துஜா வோ வத்ஸ*
*ப[1]ரதோ[1] பரதோ வாட[1] பா[1]ஹே துஜீ*

*மாதா மோஹே கைஸீ ந விஸம்பே[3] ஸர்வதா[2]*
*அந்தரீஞ்சீ வ்யதா கோண ஜாணே*

*நாமாம்ஹணே விட்டலே கா கே[3] ருஸலீஸீ*
*கேவ்ஹா ஸாம்பா[4]ளி ஸீ அனாத[2] நாதே[2]*

"தாயான விட்டலனே, க்ருபையும் இளகிய மனதும் உடைய விட்டலனே! நினைக்கும் போதெல்லாம் ப்ரேமை எனும் பாலை ஊட்டுவாயே! என்னை ஏன் மறந்துவிட்டாய்? எனனை யாரிடம் ஒப்படைக்கப் போகிறாய்? உன்னுடைய இதயம் கடினமாயிற்றா? உன்னைத் தவிர என் உயிருக்குயிரானவன் வேறு யார்? என்னுடைய கஷ்டத்தை யார் ஏற்பர்? நீ என் தாய், நான் உந்தன் குழந்தை. திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே உன்னுடையை வரவை எதிர்ப்பார்க்கிறேன். குழந்தையின் மீது மோகங்கொண்டு ஒருபோதும் மறக்காத தாயைத் தவிர அக்குழந்தையின் கஷ்டத்தை யாரே அறிவர்? விட்டலமாயே! ஏனோ கோபித்தாய்? எப்போது இந்தத் திக்கற்றவனை காப்பாற்றுவாய்?" என்கிறார் நாமதேவர்.

"அருத்தி உடைய அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால் வருத்தி வைத்து மறுமை பணித்தால் வாழ்ந்து போதீரே"

- சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்

18. து$^{1}$ஜா மாஜா தேவா காரே வைராகார
து$^{3}$க்காசே டோ$^{3}$ங்க$^{2}$ர தாக$^{2}$ விஸீ

ப$^{3}$ளே பா$^{3}$ந்தோ$^{4}$னியா தே$^{3}$ஸீ காளா ஹாதீ$^{1}$
ஐஸே காய சித்தீ ஆலே துஜ்யா

ஆம்ஹீ தேவா துஜீ கேலீ ஹோதீ ஆசா
ப$^{3}$ரவே ஹ்ருஷீகேசா களோ ஆலே

நாமாம்ஹணே தேவா க$^{1}$ராமாஜி கீவ
நாஹிதரீ ஜீவ க்$^{4}$யாவா மாஜா

"நமக்குள் என்ன விரோதம்? ஏன் துக்கத்தின் மலையைக் காட்டுகிறாய்? யமனின் கையில் நன்றாக என்னைக் கட்டிக் கொடுத்துவிட எப்படி மனம் கொண்டாய்? நான் உன்னிடம் மிக்க ஆசை கொண்டிருந்தேனே! ஏ! ஹ்ருஷிகேசா! உன்னைப் பற்றி இப்போதுதான் நன்கு புரிந்தது. என்னிடம் நீ தயை காட்ட வேண்டும். இல்லையெனில் என் உயிரைப் பறித்துக்கொள்" என்கிறார் நாமதேவர்.

"வந்து தோன்றாய், அன்றேல் உன் வையம் தாய
மலரடிக் கீழ் முந்தி வந்து யான் நிற்ப முகப்பே கூவிப்
பணி கொள்ளாய்"

- *நம்மாழ்வார்*

*19.* *ஸஹஸ்ர நாமாசே வாட1கே3*
*கா2ந்தீ3 கே4தேல நேட1கே3*

*தேவா பா1தீ துஜீ தேவாபா1தீ துஜீ*
*ஸரகத மாஜீ பக்தி பா4வே*

*பண்டரீயே கேலோ ஹாடா1*
*து3கா1ன மாண்டிலே வாளுவண்டா*

*வைஷ்ணவாஞ்சீ ப4ரலீ ஸாத*
*கி3ர்ஹாயீக பாதலே3 பஹுத*

*விகரா ஹோதஸே நாமாசா*
*லாப ஜாலா த்யா விட்டலாசா*

*நாமா தே3கு2ணா து3ப3ளா*
*விட்டலே தி3த4லே பா4ண்ட3வல"*

"நாம கோஷத்தின் வழியைப் பின் தொடர்ந்து உன்னுடையதானவும் என்னுடையதானவுமான வியாபாரத்தைச் செய்ய மெள்ள மெள்ள பக்திப் பரவசத்துடன் என்னுடைய கூட்டத்தின் யாத்திரை பண்டரீபுரத்திற்குச் சென்றது. அங்குள்ள மணற்பாங்கில் கடையை விரித்தேன். பக்த பாகவதர்களும், மற்றும் பல வியாபாரிகளும் அங்கு கூட்டம் கூடினர். நாமகோஷம் விற்கப்பட்டது. விட்டலனுக்கு நல்ல லாபம் கிடைத்தது. எளியவனான நாமாதேவரை பார்த்து விட்டலன் பெரும் பொருளைக் கொடுத்தான்" என்கிறார் நாமதேவர்.

"ஆலமுண்டான் எங்கள் பாண்டிப்பிரான் தன்
அடியவர்க்கு மூலப் பண்டாரம் வழங்குகின்றான்
வந்து முந்து மினே"

- *திருவாசகம்*

*20.* *மோஹ பு4ஜங்கே3 ட3ங்கிலே*
*விஜய லஹரீ ஜாங்கோளிலே*

*தா4வ தா4வ சக்ரபாணீ*

ஆணிகா ந கரவே தா[1]வணீ

நாமாம்ஹணே நிர்விஷ ஜாலோ
கேசவ நாமே உபசாரிலோ

"மோஹம் எனும் ஸர்ப்பம் தீண்டியது. கீர்த்தி கண்ணை மறைத்தது, காப்பாற்ற யாரும் இல்லாததால் ஏ! சக்ரபாணீ! ஓடோடி வருவாயாக. உந்தன் கேசவ நாமத்தைச் சொல்லிட விஷமெல்லாம் இறங்கிவிட்டது" என்கிறார் நாமதேவர்.

"ஆளும் வல்வினைகளைத் தீர்க்கும் அருமருந்தால வாயில் அப்பனே அருள் செயாயே"

- அப்பர்

# ஏகநாதர் அபங்கங்கள்

1. கலீமாஜி ஸோபே கேதா ராம நாம
நாஹிகாஹி ச்ரம ஜபதப

நலகே[3] ஸாதன பஞ்ச அக்னி து[4]ம்ரபா[1]ன
நாமேஞ்சி பாவன யுகாயுகீ

யோக யாக யக்ஞ நலகே[3] யேர ஜாரா
நாம மந்த்ர பு[1]ரா ஜப ஆதீ

ஏகா ஜனார்தனீ நிச்சயோ நாமாசா
தேதே[2] களிகாளாசா ரீக[4] நாஹீ

கலியுகத்தில் ராம நாம ஜபம்தான் சுலபமானது. இதில் ஒன்றும் சிரமமேயில்லை. பஞ்சாக்னியில் இருப்பது போன்ற கடின ஸாதனங்கள் தேவையில்லை. நாமத்தின் புனிதத் தன்மை யுகம் யுகமாக உள்ளது. யோகம், யாகம், யக்ஞம் இவைகளால் பிறப்பு இறப்பு ஆகியன நீங்காது. நாம மந்திரமே போதுமானது. எங்கு நாமத்தின் பால் திடசித்தம் உள்ளதோ அங்கு கலியின் தாக்கம் ஏற்படாது" என்கிறார் ஏகநாத ஸ்வாமிகள்.

"நாடீர் நாடோறும் - வாடா மலர் கொண்டு

பாடீர் அவன் நாமம் - வீடே பெறலாமே"

- நம்மாழ்வார்

2. தன்ய ஆஜிதின ஸந்த தர்சனாசா
அனந்த ஜன்மாஞ்சா சீண கே[3]லா

மஜ வாடே[1] த்யான்சீ ஆலிங்கன த்யாவே
கதா[3] ந ஸோடா[3]வே சரண த்யாஞ்சே

விவித[4] தாபாஞ்சீ ஜாஹலீ போ[3]ளவண
தேகில்யா சரண வைஷ்ணவாஞ்சே

ஏகா ஜனார்தனீ க[4]டோ[3] த்யாஞ்சா ஸங்க
ந வ்ஹாவா வியோக[3] மாஜ்யா சித்தா

இன்று ஸாதுக்களின் தரிசனம் பெற்றேன். ஜன்ம ஜன்மாந்திர வினைகளெல்லாம் ஒய்ந்து போயின. ஸாதுக்களைக் கட்டியணைத்திடவும் அவர்களின் சரணங்களிலிருந்து ஒரு போதும் விலகாமல் இருந்திடவுமே நினைக்கிறேன். பாகவத அடியார்களின் பாதங்களைக் கண்டவுடன் எல்லாத் தாபங்களும் இருக்குமிடம் தெரியாமல் போய்விடுகின்றன. (ஆகையால்) அவர்களின் ஸங்கம் கிடைக்கவேண்டும். அவர்களைப் பிரிவது என்பதான எண்ணம் மனதில் எழ வேண்டாம்" என்கிறார் ஏகநாதர்.

"தன்ய ஆஜிதின -ஜாலே ஸந்தாஞ்சே தர்சன
ஜாலீ பாபாதாபா துடீ -தைன்ய கேலே உடாஉடீ"

- துகாராம்

3. ஸத்குரு ஸீ சரண ஜாய
த்யாஸீ ப்ரம்ம ப்ராப்தி ஹோய

நலகே[3] ஆணிக[1] உபா[1]ய
த[4]ரா ஸத்குருசே பாய

ஸத்ருகுசே சரண தீர்த்த
மஸ்தகீ வந்தா[3]வே பவித்ர

ஏகா ஜனார்தனீ ஸத்குரு

*ஹாசி ப[4]வ ஸிந்து[4]சா தா[1]ரு*

"ஸத்குருவை சரணடைய ப்ரம்மானுபவம் பெறலாம். இதைத் தவிரவேறு உபாயமில்லை. ஸத்குருவின் பாதங்களைப் பிடித்துக் கொள்ளுங்கள். பவித்ர மான அவரது பாத தீர்த்தத்தை தலையில் ஏந்தி வணங்கிடல் வேண்டும். இப்பி றவிப் பெருங்கடலினின்று நம்மைக் கரையேற்றுபவர் ஸத்குருதான்" என்கி றார் ஏகநாதர்.

'குருவும் இஷ்டதெய்வமும் ஒன்றே. சாதகனை சர்வேசுவரனோடு இணைத்து வைப் பவர் குரு.'

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

4. *ஸந்த சரணீஞ்சா மஹிமா*
*காஹி ந களே ஆகம நிகமா*

*ப்ரம்மா கா[4]லீ லோடா[1]ங்க[3]ண*
*விஷ்ணு வந்திதோ ஆப[1]ண*

*சிவ கே[4]தோ[1] பா[1]ய வணீ*
*தன்ய தன்ய ஸந்த ஜனீ*

*தயா ஸந்தாசா ஸாங்கா[3]த*
*ஏகா ஜனார்தனீ நிவாந்த*

"ஸாதுக்களின் பாத கமலங்களின் மகிமை வேத சாஸ்திரங்களாலும் அறிய முடியாதது. மஹாவிஷ்ணு அடியார்களின் பாதங்களை பூஜிக்கிறார். பிரம்மா அவர்கள் முன் அங்க ப்ரதக்ஷிணம் செய்கிறார். சிவனோ அவர்களின் பாத தீர்த்தத்தைப் பெறுகிறார். இந்த ஸாதுக்கள் பெரும் பேறு பெற்றவர்க ளன்றோ! அவர்களின் சேர்க்கையால் மனது அமைதியை அனுபவிக்கிறது" என்கிறார் ஏகா ஜனார்தனர்.

"மெய்யடியார்கள் தம் ஈட்டம் (கூட்டம்) கண்டிடக் கூடுமேல் அது காணும் கண் பய னாவதே"

- குலசேகரப் பெருமாள்

5. *தேவ ப[4]க்த உபே[4] தோன்ஹீ ஏகே டாயீ*
*சலா ஜாவூ பா[3]யீ தயா கா[4]வா*

ஆவடிசா ஹேத பு1ரேல மனாசா
உச்சாரிதா வாசா விட்டல நாம

கருனியா ஸ்னான புண்டலீகாசீ பே4டீ
நாசு(ம்) வாளுவன்ட்டீ வாஹீ டா1ளீ

ஜாவூ மஹாத் வாரீ பா1ஹூ தோ ஸாவளா
ஓவாளு கோபாளா நிம்ப3லோண

ஏகாஜனார்தனீ மனோரத பு1ரே
வாஸனா தே நுரே மாகே3 காஹீ

"இறைவனும் பக்தனும் ஒரே இடத்தில் இருக்கும் ஊருக்கு (பண்டரிபுரம்) போகலாம் வாருங்கள். விட்டலனின் நாமத்தை உச்சரித்துக் கொண்டு சென்றால் மனதின்பால் இசைந்தவையெல்லாம் நிறைவேறும். பீமாநதியில் குளித்துவிட்டு, புண்டலீகனை தரிசித்து, அந்த மணற்பாங்கில் கையில் சிப்ளாவை ஏந்தி ஆடிடலாம். கோவில் மஹா த்வாரத்தையடைந்து அந்த நீல வண்ண கோபாலனை பார்த்து எல்லாத் தீமைகளும் விலக ஆலத்தி எடுக்கலாம். மனோரதம் இவ்வாறு நிறைவேற வாஸனாதிகள் (மலங்கள்) அறவே நசிந்து விடும்" என்கிறார் ஏகநாத ஜனார்தன ஸ்வாமீ.

"அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலனென்றி நாதவென்றரற்றி"

- திருவாசகம்

6. கே3லோ குருலாகீ3 சரண
மாஜே ஹரபலே மீ தூ1பண

த்வைத1 பா4வ கே3லா தே3 சோத4டீ3
போ3த4 தீ3டா1 மஜ ஸம்வக3டீ3

மந்த்ர ஸாங்கே3 த்ரி அக்ஷர
பராத்பரா நிஜக4ர

ஜபதா மந்த்ர லாகலே த்யான
ஸஹஜ குன்ட்டலே மீதூபண

*ஏகா ஜனார்தனீ ஸமாதி*
*ஸஹஜ துடலீ உபாதீ*

"குருவை சரணடைந்தேன். நான், நீ என்ற எண்ணம் மறைந்தது த்வைத பாவனை ஒழிந்தது. உண்மை அறிவு கூடியது. பராத்பரனின் மூலமான மூன் றெழுத்து மந்திரத்தை (விடல) குரு உபதேசிக்க, அதையே த்யானித்துக் கொண்டு ஜபிக்க, நான் நீ என்கிற பாவம் தானாகவே குன்றிவிட்டது. அந்த ஸஹஜ ஸமாதி நிலையில் மனதின் உபாதிகளெல்லாம் அறுந்து போயின" என்கிறார் ஏகாஜனார்தனர்.

"முற்ற உலகெல்லாம் நீயேயாகி
மூன்றெழுத்தாய முதல்வனேயோ"

- *பெரியாழ்வார்*

7. *ஜ்யா நாமே பா$^{1}$ஷாண ஜலாந்த தரலே*
*நாமே த்யா ரக்ஷிலே ப்ரஹ்லாதாஸீ*

*அக்னி விஷபா$^{3}$தா$^{4}$ நாமேஞ்சி நிவாரீ*
*கி$^{3}$ரீ ஆணி க$^{1}$ந்தரீ ரக்ஷீ நாம*

*ப்ரம்ம ஹத்யாரீ வால்ஹா நாமேஞ்சி த$^{1}$ரலா*
*த்ரைலோகீ மிரவலா ப$^{3}$டி$^{3}$வார*

*ஏகா ஜனார்தனீ நாமேஞ்சீ தரலே*
*ஜடஜீவ உத்த$^{4}$ரலே யுகாயுகீ*

"எந்த பகவந் நாமமானது கல்லைத் தண்ணீரில் மிதக்க வைத்ததோ அந்த நாமமானது பக்த ப்ரஹ்லாதனை நெருப்பு, விஷம், மலை, காடு முதலியவற்றி லிருந்து காப்பாற்றியதன்றோ! நாமத்தினாலன்றோ ப்ரம்மஹத்யாதி தோஷங் களை அடைந்த வால்மீகி மூவுலகிலும் பெருமை பெற்றார்! யுகந்தோறும் ஜட ஜீவர்கள் நாம மகிமையினால் கரையேற்றப்பட்டு பெரும் பேற்றையடைந்தார் கள்" என்கிறார் ஏகா ஜனார்தனர்.

"எண்ணலாம் போதேயுன் நாமமெல்லாம்
எண்ணினேன் என்னைக் குறிக் கொண்டென்றும்"

- *பெரியாழ்வார்*

8. *வேத³ சாஸ்த்ரீ கா³யிலா புராணீ வர்ணிலா*
*தோ சிவ பாஹிலா டோ³ளே ப⁴ரீ*

*தேணே மாஜ்யா மனா ஹோாய ஸமாதான*
*ஆட²விதோ சரண வேளோ வேளா*

*ஸகள இந்த்ரியா ஜாலீ பை விஷ்ராந்தீ*
*பாஹாதா தீ மூர்த்தி சங்கராசீ*

*ஏகா ஜனார்தனீ சிவ ஹா ப⁴ஜாவா*
*ஸம்ஸார கராவா ஸுகரூப*

"வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள் இவையெல்லாம் வர்ணித்துப் பாடும் சிவபெருமானை கண் குளிரப் பார்த்தேன்; மனதும் திருப்தியடைந்தது. அவருடைய பாத கமலங்களை வேளைதோறும் நினைந்திடவும். அம்மூர்த்தியைப் பார்க்கும் போதும் இந்திரியங்களெல்லாம் அமைதியடைகின்றன. சிவனைப் பஜித்துக் கொண்டு இல்வாழ்க்கையில் சுகமடையுங்கள்" என்கிறார் ஏகா ஜனார்த்தனர்.

"நான் மறைகள் தாமறியா எம்பெருமான் ஈசா
வென்றேத்தின காண்சாழலோ"

- திருவாசகம்

9. *ஸா கூ³னியா பா¹யா ஜனா வினவீத*
*முகீ² போ³லா த³த்த வாரம்வார*

*தேணே தும்ஹா ஸுக² ஹோாயீல அபார*
*தத்த த³யாஸாகர ஆட² வாவா*

*ஸ்திரியா புத்ர ஸம்ஸாரா கு³ந்தஸீ பா¹மரா*
*தேணே தூ அகோ⁴ரா பா¹வசீல*

*ஏகா ஜனார்தனீ சிந்தீ தத்த பாயா*
*தத்த ரூப காயா ஜாலீ த்யாசீ*

"ஜனங்களே! அடிக்கடி வாயால் 'தத்த' (தத்தாத்ரேயர்) நாமத்தைக் கூறுமாறு

உங்கள் கால்களைப் பிடித்து வேண்டுகிறேன். கருணைக் கடலான தத்தரை நினைத்துக் கொள்வீராகில் உங்களுக்கு எல்லையற்ற சுகமேற்படும். மக்கள், மனைவி என்று இல்லறத்திலேயே கட்டுண்டு பாமரனாகக் கிடந்தால் நரகம் தான். தத்த குருவின் சரணங்களை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பவ னின் தேகம் தத்த ரூபமாகவே ஆகிவிடும்" என்கிறார் ஏகநாத ஜனார்தனர்.

**'ஆத்மபோதம் தலையெடுக்கும் பொழுது நீயே நான், நானே நீ' என்றாராம் ஆஞ் சநேயர் ஸ்ரீ ராமனிடம்.**

**- ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்**

*10.* ***உத$^{3}$ண்ட$^{3}$ க்ஷேத் ராசீ பா$^{1}$ஹீலீ ரசனா***
***பண்டரீஸீ ஜாணா பூ$^{4}$ வைகுன்ட்ட***

***தீர்த்த ஆணி தேவ ஸந்த ஸமாகம***
***ஐஸே ஸர்வோத்தம கோடே$^{2}$ நாஹீ***

***ஸாக$^{3}$ராதீ தீர்த்த பஹுதாம்) பாஹிலே***
***பரிஹே மன வேத$^{4}$லே பண்டரீனே***

***ஏகா ஜனார்தனீ ஸுகா$^{2}$சீ விஷ்ராந்தீ***
***பா$^{1}$ஹாதா விட்டல மூர்த்தி நாமபோலா***

"பலப்பல க்ஷேத்திரங்களை தரிசித்துள்ளேன். பூவைகுண்டம் எனும் பண்ட ரிபுரம், அங்குள்ள விட்டலன், தீர்த்தம், அடியார்களின் வருகை இவை எல்லா வற்றிலும் மிக உயர்ந்ததான இந்த பண்டரி க்ஷேத்திரத்தைப்போல் எங்கும் காணேன். ஸமுத்ராதி தீர்த்தங்களிலெல்லாம் நீராடினும் பண்டரிபுரத்தின் மீதுதான் மனம் ஆசை கொள்கிறது. விட்டலனை தரிசிப்பதிலும் அவனு டைய நாமத்தை உச்சரிப்பதிலும்தான் மனம் சுகத்தையும், நிம்மதியையும் அடைகிறது" என்கிறார் ஏகாஜனார்தனர்.

**"பக்தர்களும் பகவர்களும் பழமொழியாய் முனிவர்களும் பரந்த நாடும் சித்தர்க ளும் தொழுது இறைஞ்சத் திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே"**

**- பெரியாழ்வார்**

*11.* ***ஆஜிசா ஸுதின ஆம்ஹா ஜாலா ஆனந்து***
***ஸகளாம்) ஸ்வரூபீ தே$^{3}$கோ$^{2}$ கோவிந்து***

பாஹிலாகே$^{3}$ மாய ஆதா ஸாங்கூ$^{3}$ மீ கை$^{1}$ஸே
ஜேதே$^{2}$ பா$^{1}$ஹே தேதே$^{2}$ கோவிந்து தி$^{3}$ஸே

பா$^{1}$ஹாதா$^{1}$ பா$^{1}$ஹணே த$^{1}$டஸ்த$^{2}$ டே$^{2}$லே
ஸபா$^{3}$ஹ்ய அப்ய$^{4}$ந்தரீ புருஷோத்தம கோ$^{2}$ந்தலே

யா பரி பாஹாதா ஹர்ஷ ஹோதஸே மனா
ஏகா ஜனார்தனீ தனீ நபுரே மனா

"இன்றைய நாள் ஆனந்தமான நன்னாளாகும். எல்லாமே கோவிந்தனாக, அவன் ஸ்வரூபமாகவே பார்ப்பதை எவ்வாறு சொல்லிடுவேன். எங்கே நோக்கினும் அங்கே கோவிந்தன் தென்பட, பார்ப்பது என்பதே நின்று போகிறது. உள்ளும் புறமும் அந்த புருஷோத்தமனே நிரம்பியுள்ளான். எங்கும் அவனைக் காண மனம் கொள்ளாத ஆனந்தம் ஏற்படுகிறது; தன்யனானேன்" என்கிறார் ஏகா ஜனார்த்தனர்.

"காணுமதொழிந்தேன் நின்றிருப்பதாம் கண்டு
கண்களி கூரப் பேணும தொழிந்தேன்"

- திருவாசகம்

12. வைஜயந்தீ மாள கிரீட குண்டலே
ரூபதே ஸாவளே விடேவரீ

வேத$^{4}$லே வோ மன த$^{1}$யாச்யா சரணீ
ஹோதாதீ பா$^{1}$ரணீ டோ$^{3}$ளியாஞ்சீ

புராணாஸீ வாட$^{4}$ சாஸ்த்ராஸீ தே கூ$^{3}$ட$^{4}$
தே அம்ஹான்ஸீ உ$^{3}$கட$^{3}$ பரப்ரம்ம

த்யானீ த்யாதீ முனி சிந்திதீ ஆஸனீ
தோ ஹா சக்ரபாணீ ஸுலப அம்ஹா

ஸன்முக$^{2}$ பீ$^{2}$வரா மத்யே புண்டலீக
ஏகா ஜனார்தனீ ஸுக தன்ய தன்ய

"கழுத்தில் வைஜயந்தி மாலை, கிரீட குண்டலங்கள், செங்கல் மீது இணை அடிகள் நீல வர்ணம் பிரகாசிக்க நிற்கும் அந்த (விட்டலனின்) உருவம் கண்டு

மனமானது அடங்கா ஆசை கொள்கிறது; கண்களுக்கு பெரும் விருந்தாக அமைகிறது. சாஸ்திரங்களில் தெளிவில்லாமலும் புராணங்களில் பலவாறாக வும் பேசப்படும் அந்த பரப்பிரம்மம் எமக்கு நன்கு புலனாகிறது. ஆஸனாதி தியானங்களினால் சித்தர்கள், முனிவர்கள் தரிசிக்கும் அந்த சக்ரபாணி, பீமா நநதிக்கரையில் புண்டலீகனோடு இன்முகமாய் நமக்குத் தோன்றுகிறான்" என் கிறார் பெரும்பேற்றைப் பெற்ற ஏகா ஜனார்தனர்.

'வண்ணந்தானது காட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவை காட்டி வழியற்றேனைத்
திண்மைதான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்.'

- *திருவாசகம்*

*13.* *மாஜ்யா மனா லாகோ சந்த*
*நித்ய கோவிந்த கோவிந்த*

*தேணே நிரஸேல் பந்தன*
*முகீ வதே நாராயண*

*ப்ரம்மரூப ஹோய காயா*
*மாயா ஜாயீல விலயா*

*ஹோய ஸர்வ ஸுக தணீ*
*சுகே ஜன்ம மரண காணீ*

*ம்ஹணே ஏகா ஜனார்தன*
*ஸதா ஸமாதான மன*

"நிதமும் 'கோவிந்த, கோவிந்த என்று பஜிக்க மனமானது ஆசை கொள்ளட் டும். வாயால் 'நாராயணா' எனச் சொல்ல உலக பந்தங்களெல்லாம் விலகும். மாயை விலகிட சரீரமானது ப்ரம்மானந்தத்தை அனுபவிக்கும். சுரங்கம் போன்ற பிறப்பு -இறப்பு இவற்றிலிருந்து தப்பி எல்லா இன்பங்களுக்கும் எஜ மானனாகிவிடலாம். மனமும் எப்போதும் ஸமாதான நிலையில் இருக்கும்" என்கிறார் ஏகா ஜனார்தனர்.

"முத்தனே, முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர் பறித்திறைஞ்சிப் பத்தியாய்
நினைத்துப் பரவுவார் தமக்குப் பரகதி கொடுத்தருள் செய்யும் சித்தனே"

- திருவாசகம்

14. அவகே[4]ஞ்சி த்ரைலோக்ய ஆனந்தாசே ஆதா[1]
சரணீ ஜகன்னாதா சித்த டே[2]லே

மாய ஜகன்னாத பா[3]ப[1] ஜகன்னாத
அனாதாஞ்சா நாத ஜனார்தன

ஏகா ஜனார்தனீ ஏகபணே உபா[4]
சைதன்யாசீ சோபா[4] சோப[4]லீஸே

"மூவுலகத்திலும் இருப்பதெல்லாம் இப்போது ஆனந்தமயமாகிவிட ஜகன்னாதனின் சரணங்களில் சித்தத்தை வைத்தேன். தாயும் ஜகன்னாதன்! தந்தையும் ஜகன்னாதன்! திக்கற்றவர்களின் நாதன் அந்த ஜனார்தனன். (ஏகநாதரின் குருவின் பெயரும் ஜனார்தனர்) சைதன்யத்தோடு, உயிர்ப்புடன் திகழும் அந்த் இறைவன் முன் மனது ஒன்றுபட்டு நிற்பதாகப் பாடுகிறார் ஏகநாத ஜனார்தன ஸ்வாமி.

"எளிதாயினவாறு என்றென் கண்கள் களிப்பக்
களிதாகிய சிந்தையனாய்க் களிக்கின்றேன்"

- நம்மாழ்வார்

15. தே[3]ஹீ சத்ரு அஸதீ தூ[3]ர தே[3]சீ
யேதா ப[3]ஹு திவஸ லாக[3]தீ தயான்ஸீ

பா[3]ஹ்ய சத்ருஞ்சே அல்ப துக்க
மனசத்ருசே வர்ம அசேக[2]

ஆஸனீ சயனீ ஏகாந்தீ
ஜபீ அத[2]வா த்யான ஸ்திதீ

ஜசியா மனாதே நஜிங்கிதா
தே[3]வபண நயே ஹாதா(ம்)

தே[3]வப[1]ணாசே பு[4]லலே ஹாவே
ஏகாஜனார்தனீ நேணதீ தேவே

“தேகத்திற்கு எதிரி தூர தேசத்தில் உள்ளான். அவன் வருவதற்கு நாட்களா கும். வெளியிலிருந்த வரும் எதிரிகளின் துன்பம் கொஞ்சம்தான். மனதே எதிரி யான பின் அவனுடைய மனதின் உளைச்சல் சொல்லொணாதது, ஆஸனம், த்யானம், ஜபம் முதலியவற்றால் மனதை வெல்ல முடியாத நிலையில் தெய்வத் தன்மை கைக்கு எட்டாது. தெய்வத்தன்மை எட்டும் ஆசையில் மயங்குவாரெ னில் இறைவனை அறிய முடியாது” என்கிறார் ஏகா ஜனார்தனர்.

“மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை ஊன்றி...
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே”

- அப்பர்

*16. கா[1]ய து[1]ஜே வேசே தே[3]வா*
*மன ஆபுலே ஸ்வாதீன டே[2]வா*

*ஹேஞ்சி மா[3]கணே துஜ ப்ரதீ*
*வாரம் வார ஹே வினந்தீ[1]*

*மாஜீ டே[2]வா ஆட[2]வண*
*ம்ஹணே ஏகா ஜனார்தன*

“இறைவா! என் மனதை உன் வசத்தில் வைத்திட உனக்கு என்ன செலவா? உன்னிடம் திரும்பத்திரும்ப பணிவுடன் வேண்டிக் கேட்டுக் கொள்வது எல் லாம் இதைத்தான். உந்தன் நினைவில் என்னை வைத்துக் கொள்வாயாக” என் கிறார் ஏகா ஜனார்தனர்.

“வைத்தேன் மதியால் எனதுள்ளத்தகத்தே
எய்த்தோயொழி வேன்அலேன் என்றும் எப்போதும்”

- நம்மாழ்வார்

*18. மனே ப்ரம்மாதிகா கேலீஸே தோ[2]கடீ[3]*
*தேதே[3] பரவடீ[3] கோண மானவாசீ*

*இந்திரிய நசாலே மனாவின தேகா[2]*
*மனாசீ மனரேகா[2] நுல்லங்க[4]வே”*

*சஸ்த்ரே தே ந துடே ஜள தே ந[3]புடே*
*ஐஸே தே போவாடே[3] மனே ஹோதீ*

*ஏகா ஜனார்தனீ மன தே ஸ்வாதீன*
*கரிதா ஸர்வ யக்ஞ ஹாதீ ஜோடே[3]*

"மனதைக் கொஞ்சம் அந்த ப்ரம்மத்தில் திருப்பிவிட்டால் அங்கு மனிதர்க் ளின் விவஸ்தை இல்லாத காரியமெல்லாம் எடுபடாது. மனது அமைதியாகி விட்டால் அங்கு இந்திரியங்களின் ஓட்டம் நின்றுவிடும். மனதை மீறி அவைக ளால் ஒன்றும் செய்ய முடியாது. ஆயுதங்களாலும் வெட்ட முடியாதது, நெருப்பும் எரிக்காத, நீரிலும் மூழ்காத இப்படியான மகிமையை மனது அடை கிறது. மனதை அடக்கிவிட்டால், ஸ்வாதீனம் செய்துவிட்டால், எல்லா யாக் யக்ஞங்களும் செய்த பலன் கைக்கு எட்டியதாகிவிடும்" என்கிறார் ஏகா ஜனார் தனஸ்வாமி

**"இன்னமுது எனத்தோன்றியோரைவர் யாவரையும் மயக்க நீ வைத்த முன் மாய மெல்லாம் முழுவேரரிந்து"**

**- ஆழ்வார் பாசுரம்**

*18. மன மனாஸீ ஹோய ப்ரஸன்ன*
*தேவ்ஹா வ்ருத்தி ஹோய நிரபீமான*

*பா[1]வோனி கு[3]ரு க்ருபேசீ கோ[3]டீ[3]*
*மனா மன உபவீ குடீ*

*ஸாத[4]கே[1] ஸம்பூர்ண*
*மன ஆவராவே ஜாண*

*ஏகா ஜனார்தனீ சரண*
*மன ஹோய ஸமாதா[4]ன*

"மனதானது மனதிலேயே இருந்துவிட்டால் (இந்திரியங்களின் பின்னால் ஓடாமல்) எதிலும் அபிமானம் கொள்ளாத தன்மை வளரும். குரு க்ருபையை இனிதே அடைந்து மனதில், மனதாகிற கொடியை ஏற்றிடவும், இந்த ஸாத் னைகள் நன்கு முடிவுற, மனதைக் கட்டுப்படுத்த வேண்டும். மனமும் ஸமாதா னம் அடையும்" என்கிறார் இறைவனை சரணடைந்த ஏகா ஜனார்தனர்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கலாற்றின்
எழுமையும் ஏமாப்புடைத்து."

– திருக்குறள்

19. *அவிச்வாஸா க4ரீ*
*விகல்ப நான்தே நிரந்தரீ*

*ப4ரலா அங்கீ3 அவிசுவாஸ*
*பரமார்த்த தேதே2 ஸதா3 பூ4ஸ*

*ஸகள தோஷாஞ்சா ராஜா*
*அவிசுவாஸ தோ ஸஹ ஜா*

*அவிசுவாஸ த4ரிதா1 போ1டீ4*
*ஏகா ஜனார்தனீ நாஹீ பேடீ4*

"இறைவனிடம் அவநம்பிக்கை கொண்டால் விகல்பம்தான் (பேதம், குதர்க்கம் முதலியவை) நிரந்தரமாகத் தங்கிவிடும். உடலில் (மனதில்) அவநம்பிக்கை நிரம்ப அங்கு ஆன்மீகம் பதராகப் போய்விடுகிறது. எல்லாத் தோஷங்களுக்கும் ராஜாவாக இருப்பது இந்த அவநம்பிக்கைதான். மனதில் அவநம்பிக்கை கொண்டால் இறைவனைக் காண இயலாது" என்கிறார் ஏகா ஜனார்தனர்.

20. *தேவா மாஜே மன லாகோ3 து1ஜே சரணீ*
*ஸம்ஸார வ்யஸனீ படோ3 நேதீ3*

*நாம ஸ்மரண க4டோ3 ஸந்த ஸமாகம*
*வாவுகாசீ ப்ரம நகோ தேவா*

*பா1யீ தீர்த்த யாத்ரா முகீ ராம நாம*
*ஹாசி மாஜா நேம ஸித்தீ நேயீ*

*ஆணிக மாக3ணே நாஹீநாஹீ தே3வா*
*ஏகா ஜனார்தனீ ஸேவா த்ருட4 தே3யீ*

"இறைவா! எந்தன் மனம் உன் காலடிகளையே பற்றியிருக்கட்டும். இந்த ஸம்ஸாரத்தில் கிடந்து துயரமடைய விடாதே. நாம ஸ்மரணத்திலும், ஸாதுக்க

ளின் கூட்டத்திலும் ஈடுபட வே.  வீணாக ப்ரமை கொள்ள விடாதே! வாயில் இராம நாமமும், தீர்த்த யாத்திரையும் எனக்குக் கிடைக்க வேண்டும். இறைப் பணியில் திடமாக இருக்கவேண்டும். இதுவே என் நியதியாயிருக்க வேறொன்றையும் நான் கேட்கவில்லை" என்கிறார் ஏகநாத ஜனார்தனர்.

"திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்
திருவடி ஞானமே திண் சித்தி முத்தியே"

- திருமந்திரம்

21. குரு பரமாத்மா பரேசு
ஐஸா ஜ்யாசா த்ருட் விஷ்வாஸு

தேவ தயாசா அங்கிலா
ஸ்வயே ஸஞ்சலா த்யாசே க்ரா

ஏகா ஜனார்தனீ குருதேவ
யேதே நாஹீ பா ஸம்சய

"பரமாத்மா, பரமேஸ்வரன் எல்லாம் குருவே என திடமாக நம்புகிறவனுக்கு இறைவன் அவனுடைய வீட்டிற்குத்தானே சென்று அவனுக்கு உதவி புரிகின்றான். குருவே இறைவன் என்பதில் சந்தேகமில்லை" என்கிறார் ஏகா ஜனார்த்தனர்.

"குருவே சிவனுமாய்க்கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர்வற்றதோர் கோவே"

- திருமந்திரம்

22. மாஜே மாஹேர பண்டரீ
ஆஹே பீவரேசே தீரீ

பாப் ஆணி ஆயி
மாஜீ விட்டல ரகுமாயீ

புண்டலீக ப்ந்தூ ஆஹே
த்யாசீ க்யாதீ ஸாங்கூ காய

மாஜீ பஹீண சந்த்ரபாகா

*கரீதஸே பாப ப$^{4}$ங்கா$^{3}$*

*ஏகா ஜனார்தனீ சரண*
*கரீ மாஹேரீச் ஆட$^{2}$வண*

பீமா நதிக்கரையிலிருக்கும் பண்டரீபுரம்தான் என் தாய் வீடு. விட்டலனும், ரகுமாதேவியும் என் தாய் தந்தையர் ஆவர். புண்டலீகன் எனது சகோதரன். அவனுடைய புகழைச் சொல்லிட முடியாது.

சந்த்ரபாகா நதி எனது சகோதரியாவாள், அவள் எல்லாப் பாவங்களையும் அகற்றிடுவாள். தாய்வீட்டை நினைத்துக் கொண்டு விட்டலனை சரணடைகிறார் ஏகா ஜனார்தனர்.

23. *நிர்கு$^{3}$ணாசே ப்ராப்தி ஸகு$^{3}$ணாசே யோகே*
*வரி பக்தி அங்கீ த்ருட பா$^{4}$வ*

*நலகே$^{3}$ த்யான ப்ரெளடீ யோக யாக தபே*
*ஞானசியே பாவே ஹாதா நயே*

*பாஹிஜே ஸமதா ஸர்வபூ$^{4}$தீ பா$^{4}$வ*
*முங்கீ$^{3}$ ஆணி ராவ ஸாரகே$^{3}$சீ*

*ஏகா ஜனார்தனீ ஹேஞ்சி ஹாதவடீ*
*தேவா துஜீ பே$^{4}$டீ$^{1}$ தரீச ஹோய*

"திடமான பக்தி பாவத்துடன் ஸகுண உருவத்தை வழிபடுவதாலேயே நிர்குண உருவத்தை அனுபவிக்க முடியும் த்யானம். யோக, யாகம் இவற்றால் பூர்ண ஞானம் கைவர இயலாது. எறும்பு முதல் அரசன்வரை ஸமமாகப் பாவிப்பது, எல்லா உயிர்களிடத்திலும் இறைவன் குடிகொண்டுள்ளான் என்ற பாவனை கொள்வது முதலியவை கைவரப்பெற்றால்தான் உன்னுடைய தரிசனம் கிடைக்கும்" என்கிறார் ஏகா ஜனார்தனர்.

**"வீடாக்கும் பெற்றியறஇயாது -மெய் வருத்திக் கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர் - வீடாக்கும் மெய்ப் பொருள்...... நாராயணன்"**

- *(முதல் திருவந்தாதி)*

24. *அக$^{2}$ண்ட$^{3}$ ஸதா$^{3}$ த்$^{4}$யான*

பாண்டுரங்கீ லாவா மன

ஐஸா உதா$^{3}$ர ஹா ஹிரா
டா கூனி வேசிதா$^{1}$தீ$^{1}$ கா$^{3}$ரா

அம்ருத ஸான்டோ$^{3}$னீ
ப$^{3}$ளே கே$^{3}$தீ காஞ்ஜவணீ

காமதேனு கல்பதரு
ஏகா ஜனார்தனீ ஆக$^{3}$ரு

“பாண்டுரங்கனின் அகண்ட த்யானத்தில் மனதை இடையறாமல் செலுத்த வேண்டும். பாண்டுரங்கனைப் போன்ற உதார (வேண்டுவதை அளிக்கும்) வைரம் இருக்க (அதை விட்டுவிட்டு) சுண்ணாம்புக்கல்லை பொறுக்குகிறார்களே! அம்ருதத்தை விட்டுவிட்டு கஞ்சித் தண்ணியை நன்றாகக் குடிக்கிறார்களே! காம தேனு, கல்ப விருக்ஷம், இவையெல்லாமானவன் இறைவன் ஒருவனே” என்று ஏகாஜனார்தனர் பாடுகிறார்.

“துகா ம்ஹணே அச்யுதா
ஆமசா கல்பதரு தாதா”

- (துகாராம் அபங்கம் பரவீநாமாவளி)

# இன்னும் சில ரத்தினங்கள்

* பதித பாவன ம்ஹணவிஸீ ஆதீ
த$^{1}$ரீகா உபாதீ பக்தாமாகே$^{3}$

துஜே ம்ஹணவிதா து$^{1}$ஜே அங்க$^{3}$ ஸங்க$^{3}$
உணேபணா ஸாங்க கோணாகடே

ஸிம்ஹாசே பா$^{4}$துகே$^{1}$ ஜம்பு$^{3}$க$^{1}$ பை நேதா
தோ$^{2}$ராசியா மாதா(ம்) லாஜ வாடே$^{1}$

ம்ஹணே கான்ஹோபாத்ரா தேஹ ஸமர்ப்பணே
கராவா ஜதன்$^{3}$ ப்ரீதா ஸாடீ

"இயல்பாகவே பதித பாவனன் என்று சொல்லிக் கொண்டு பக்தனின் வழியில் பிரபஞ்ச விஷயங்களை ஏன் வரச்செய்கிறாய்? உன்னுடையவளாக இருந்தும் உன்னோடு இருக்க முடியாவிட்டால் இந்தக் குறையை யாரிடம் சொல்வது? சிங்கத்தினுடைய உணவை நரியானது அபகரித்தால் பெரியவர்களுக்கு இழுக்கல்லவா? என்னுடைய இத்தேகத்தை அர்ப்பணித்துவிட நீ உன் புகழுக்கு ஏற்றவாறு அதைக் காப்பாற்றிடவேண்டும்" என்கிறார் கான்ஹோபாத்ரா.

**"அருமையாம் புகழார்க்கருள் செய்யும் பாச்சிலாச்சிராமத் தெம்மடிகள் பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில் இவரலா தில்லையோ பிரானார்?**

*- சுந்தரர்.*

✳ *யோகீ[3]யாசா ராஜா கைலாஸ வாஸீ கே[3] மாயே*
*கா[3]தீ நாரத தும்பர புடே[4] ப[3]ஸவா ஆஹே*

*க[3]ளா(ம்) ருண்ட[3] மாளா வாஸுகீசே பூஷண*
*க[3]ஜ சர்ம பா[1]ங்கு[3]ரலா அங்கீ பஸ்மாசே லேப[1]ன*

*வாம அங்கீ கிரிஜா தேவீ ஜடா கங்கா வாஹே*
*போ[4]வதே[1] க[3]ண கந்தர்வ ஜோடோ[3]னி பா[1]ணீ உபே[4] ராஹே*

*ஸேணாம்ஹணே ஜேணே பா[4]ளீ சந்த்ர த[4]ரியேலா*
*நமஸ்கார மாஜா தயா ஆதி நாதாலா*

"யோகிகளுக்கெல்லாம் அரசனானவன் கைலாஸவாசியாவான். அவன் முன் நாரதர், தும்புரு முதலியவர் அமர்ந்துள்ளனர். அவன் மண்டை ஓட்டு மாலைகளையும் பாம்புகளையும் அணிந்து யானையின் தோலைப் போர்த்துள்ளான். உடல் முழுவதும் திருநீற்றின் பூச்சு. இடது பாகத்தில் மலைமகளும், ஜடையில் கங்கையும் உள்ளனர். சுற்றிலும் சிவ கணங்களும், கந்தர்வர்களும் கை கூப்பி நின்றுள்ளனர். நெற்றியில் இளம் பிறையை தரித்த அந்த ஆதி நாதனுக்கு என்னுடைய நமஸ்காரம்" என்கிறார் ஸேனாநாவீ.

**"மூலையிருந்தாரை முற்றத்தே விட்டவர் சாலப்பெரியர் என்றுந்தீ பற**
**தவத்தில் தலைவர் என்றுந்தீபற"**

*- திருவுந்தியார்*